Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.




## அரைக்கீரை
## விதைத் தைலம்

●

அரைக்கீரை விதையுடன் 72-வித சரக்குகளும், அநேக பச்சிலைகளும் சேர்த்துத் தயாரிக்கப்பட்டது. இத் தைலத்தை வாரம் இரு முறை தேய்த்து ஸ்நானம் செய்து வர சிரசைப் பற்றிய சகல வியாதிகளைப் போக்குவதுடன் கண் எரிச்சல், கண் மறைப்பு முதலிய கண் சம்பந்தமான வியாதிகளையும், காது குத்தல், காதில் சீழ் வருதல் முதலிய வியாதிகளையும் கண்டிக்கக்கூடியது.

●

தயாரிப்பவர்கள் :

## டி. எஸ். ஆர்.

அண்டு கோ., கும்பகோணம்.

●

மதராஸ் விடி. ஏஜெண்டுகள் :

**மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ்**

பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

●

ஸ்டாக்கிஸ்டு :

லில்லி பர்ப்யூமரி மார்ட், திருச்சி.

---

மகத்தான

## 3-வது வாரம்

★

**T. K. S. சகோதரர்களின்**

நாடகம்!

★

திருச்சி

முனிஸிபல் பப்ளிக்

ஹாலில்

# சிவலீலா

(உரிமை பெற்றது)

★

1-12-44 முதல்

பிரதி தினமும்

ஞாயிறு, புதன் மாலை 7-க்கும்

மற்ற நாட்களில்

இரவு 10-30-க்கும்

T. K. S. சகோதரர்கள்

உரிமையாளர்கள்



திருவாங்கூர் திவான் சச்சி
வோத்தம ஸர். ஸி. பி.
ராமஸ்வாமி அய்யர்
அவர்கள் முன்னிலையில்




10 - 11 - 44 வெள்ளிக்
கிழமையன்று ஆரம்ப
மாகி பிரதி தினமும்

# ஐயப்பன்

(உரிமை பெற்றது)

நாடகம்

## திருவனந்தபுரம் சித்ரா தியேட்டரில்

நடைபெறுகிறது

*

உரிமைபெற்ற எமது இதர நாடகங்கள்: சக்தி லீலா,
இன்பசாகரன், ஏசுநாதர், பிரபலச் சந்திரா
பிரேம குமாரி முதலியன.

## “தசாவதாரம்” - தயாராகிறது

## மதுரை தேவி பால விநோத சங்கீத சபா

நாடகக் கலையரசு, நாடகக் கலாநிதி, நாடகக் கேசரி
நவாப் டி. எஸ். ராஜமாணிக்கம் — புரோப்ரைட்டர்.



# பஞ்ச நதிபாயும் பஞ்சாபில் —
# தேநீர் அருந்தும் நேரம்

கோடைக்காலம் பகலில் உஷ்ணம் அதிகம். தாங்க முடிகிறதில்லை. உஷ்ணத்தை உணராமலிருக்க, மாலை நேரங்களில் பஞ்சாபிகள் வீட்டுக்கு வெளியே—அநேகமாய் அம்பலத் தோப்புகளில் பொழுது போக்குவது வழக்கம். சூரியாஸ்தமனம் ஆன பின்பு, குளிர் தாக்கி விடாதபடி அவர்களைப் பாது காப்பது தேநீர்.

பால், சீனியுடன் கலந்து வைத்த தேநீர் சிங்காரமான லோட்டாக்களில் இருந்து விநியோகிக்கப் படுகிறது. திடகாத்திரமுள்ள தேகமும் தாராளமான மனதும் உள்ளவர்கள் நிறைந்த நாடல்லவா? இங்கே கோப்பைகளில் தேநீர் அருந்துவது திருப்தி கொடுப்பது இல்லை. பித்தளைச் செம்புகளிலோ அல்லது பெரிய கண்ணாடி டம்ளர்களிலோ தேநீர் அருந்துவதுதான் இங்குள்ள நாகரீகம்.

பஞ்சாப் ஆடவர்கள் பெண்டிர்களுடைய உடை வனப்பும், தோப்புகளின் இனிய காட்சியும் கண்டவர் கண் முன் என்றும் தாண்டவமாடிக்கொண்டே இருக்கும்.

இந்தியாவின் மற்றப் பிரதேசங்களைப் போலவே இங்கும் புத்தம் புதிய ப்ரூக் பாண்ட் தேயிலைக்கு நல்ல கிராக்கி இருக்கிறது.

# ப்ரூக் பாண்ட்

"இரு இலையும் ஒரு மொட்டும்"

# ஹிட்லர் தர்பார்

வழிப்போக்கன்

ஹிட்லர் :—மந்திரி கெயரிங் ! நம் நாட்டில் குடி மக்கள் எல்லாரும் வழக்கம்போல் வறுமையால் வாடிக் கொண்டிருக்கின்றனரா ?

கெயரிங்:—வாடிக்கொண்டிருக்கின்றனர், பிரபோ !

ஹிட்லர் :—நம் எதிரிகள் வார மும்மாரி குண்டு மழை பொழிந்து கொண்டிருக்கின்றனரா?

கெயரிங் :—பொழிந்து கொண்டிருக்கின்றனர், பிரபோ !

ஹிட்லர் :—குடிகள் ஆறில் ஒரு பங்கைத் தாங்கள் வைத்துக் கொண்டு, மீதியை நமக்குச் செலுத்திக் கொண்டு வருகின்றனரா ?

கெயரிங் :—செலுத்திக் கொண்டு வருகின்றனர், பிரபோ !

ஹிட்லர் :—தேவாலயங்களில் எல்லாம் முறை தவறாமல் ஆயுத உற்பத்தி நடந்து கொண்டிருக்கிறதா ?

கெயரிங் :—நடந்து கொண்டிருக்கிறது, பிரபோ !

ஹிட்லர் :—குடி மக்கள் எல்லாம் வாயார நம்மை வைது கொண்டிருக்கின்றனரா ?

கெயரிங் :—வைது கொண்டிருக்கின்றனர், பிரபோ !

ஹிட்லர் :—சரி, மிகவும் சந்தோஷம்; கிழக்குப் போர் முனையிலிருந்து நமக்கு ஏதாவது செய்திகள் உண்டா ?

கெயரிங் :—கிழக்குப் போர்முனையிலிருந்து இப்பொழுதுதான் ஒரு நல்ல செய்தி கிடைத்தது, பிரபோ !

ஹிட்லர் :—நல்ல செய்தியா ? நம்ப முடியவில்லையே! இதில் ஏதோ சூது இருக்க வேண்டும். என்ன ஹெர் கெயரிங் ? உண்மையிலேயே அது நல்ல செய்திதானா ?

கெயரிங் :—ஆமாம், பிரபோ !

ஹிட்லர் :—அப்படியானால் அது என்னவென்று நம்மிடம் தெரிவிக்கலாமா ?

கெயரிங் :—அதற்கு என்ன ஆட்சேபணை, பிரபோ ! கிழக்குப் போர்முனையே தங்களை நாடித் துரிதமாக வந்து கொண்டிருக்கிறது. அதுதான் இப்பொழுது கிடைத்த நல்ல செய்தி, பிரபோ !

ஹிட்லர் :—கிழக்குப் போர்முனையா ? நம்மை நாடியா ? எதற்காக ?

கெயரிங் :—தங்களுக்கு அதிகக் கஷ்டம் கொடுக்கக் கூடாது என்றுதான், பிரபோ ! யுத்த முனையிலிருந்து வெற்றிகரமாகப் பின்னோக்கி முன்னேறிக் கொண்டிருக்கும் நம் யுத்த வீரர்களைப் பார்ப்பதற்காகத் தாங்கள் அடிக்கடி போர் முனைக்குப் போக வேண்டியிருக்கிறதல்லவா ? போர்முனை வெகு தூரத்தில் இருந்தால் தங்களுக்குக் கஷ்டமாக இராதா ? அதற்காகப் போர் முனையே தங்கள் மீது இரக்கம் கொண்டு தங்களை நாடி வந்துகொண்டிருக்கிறது.

ஹிட்லர் :—சபாஷ்! நம்மீது இக் கிழக்குப் போர் முனை கொண்டுள்ள விசுவாசத்துக்காக மெச்சினோம் ! அதற்காக நாளைக்கு நம் உயிரை விடுவதாய் இருந்தால் அந்தப் போர் முனையிலேயே விட விரும்புகிறோம். ஆனால் அந்த மேற்குப் போர் முனையின் விஷயம் என்ன ? அது இன்னும் நம்மை நாடி வந்ததாகத் தெரியவில்லையே !

கெயரிங் :—ஏது என்ன இருந்தாலும் அந்தக் கிழக்குப் போர்முனைக்குத் தங்களிடம் உள்ள விசுவாசம் அந்த மேற்குப் போர் முனைக்குக் கிடையாது. இத்தனை நாளாக அது நின்ற இடத்தை விட்டுத் துளியாவது அசைந்ததா, பாருங்கள்! இப்பொழுது தானே கொஞ்ச நாளாக நகர ஆரம்பித்திருக்கிறது !

ஹிட்லர் :—அப்படியானால் அதிதி உபசாரத்துக் கென்றே நாம் தயாரித்து வைத்திருக்கும் வி-1, வி-2 போன்ற இரகசிய ஆயுதங்களை இனி அவ்விசுவாசம் கெட்ட மேற்குப் போர்முனைக்கே அனுப்பி வையுங்கள். அப்போதுதான் அதற்குப் புத்தி வந்து சீக்கிரம் நம்மிடம் வந்து சேரும். சரி, சபை கலையலாம் ! ஹெய்ல் ஹிட்லர் !





# பிரயாணக் கதை 2






வண்டிக்காரன் அநியாய கூலி கேட்கிறான் ஸ்டேஷனுக்குப் போய் சேர்வதற்கே இவ்வளவு கஷ்டம்

இப்பொழுதெல்லாம் வண்டிக்காரர்கள் நின்று பேரம் பேசுவதில்லை போய்விடுகிறார்கள். ஆகையால் இவர்கள் நடந்தே போகவேண்டியதுதான்




குழந்தைகள் வெகு சீக்கிரத்தில் களைப் படைந்து விடுகிறார்கள் சாரனா கமலாவை தூக்கிக்கொண்டு போகிறான்



கலியாணத்துக்கு போகும் பிரயாணம் இவ்விதமாக ஆரம்பமாகி விருக்கிறது! ஆனால் ஏழை ஜனங்கள் என்ன செய்வார்கள்?

இந்தக் குடும்பத்துக்கு என்ன நேருகிறதென்பதை அடுத்த வாரக் கதையில் காணுங்கள்.

அவசியமான பொருள்களை அனுப்ப முதலாவது இடம் அளிக்க வேண்டும். ஆகையால்தான் இன்று பிரயாணம் செய்வது சங்கடமாக இருக்கிறது.

**வீண் பிரயாணம் செய்யாதீர்கள்**

ASA 847 TM



[கார்ப்பெரும் மேனி அக்கண்ணன்: நீல மேகத்தை ஒத்த மேனியன் ராமன்; ஆர்ப்புறு வரிசிலை இளைய ஜய: கோபா வேசத்தில் வில்லின் நாணை ஒலி செய்கிற தம்பி லக்ஷ்மணா; தேர்ப் பெருந்தானையால்: தேரோடு கூடிய பெரிய சேனை கொண்டு: பரதன் சீறிய: பரதன் சீறி வரும்: குறிப்பு: 'போர்க்கோலத்தோடு வருகிற பரதனை நன்றாகப் பார் அப்பா!' என்று ராமன் சொல்லுவதில் சோகம், அன்பு, ஹாஸ்யம் எல்லாம் கலந்த அருமையான பாவம்.]

லக்ஷ்மணன் பார்த்தானோ இல்லையோ, அவ்வளவுதான்: "அடடா, என்ன பாதகம் செய்து விட்டேன். இப்படி அன்புருவமாய் வருகிற பரதனை எப்படி யெல்லாமோ திட்டி விட்டேனே?" என்கிற வருத்தம் இதயத்தைக் குத்துகிறது. முகத்திலிருந்த வீரப் பிரகாசம் மழுங்கி விட்டது.

எல்ஒடுங் கியமுகத்(து)
இளவல் நின்றனன்

மல்ஒடுங் கியபுயத்(து)
அவனை வை(த்து)எழும்

சொல்லொடும் சினத்தொடும்,
உணர்வு சோர்தர,—

வில்லொடும் கண்ணநீர்
நிலத்து வீழவே.

[எல் ஒடுங்கிய முகத்து இளவல்: பிரகாசம் நீங்கிய முகத்தவனான லக்ஷ்மணன்; மல் ஒடுங்கிய புயத்து அவனை: மல் யுத்தம் செய்து பருத்திருந்த தோள் மெலிவடைந்திருந்த பரதனை: வைத்து எழும் சொல்லொடும், சினத்தொடும் உணர்வு சோர்தர: வார்த்தை, கோபம், உணர்ச்சி மூன்றும் அப்படியே அடங்கிப் போக; வில்லொடும் கண்ணநீர் நிலத்து வீழவே: கையிலிருந்த வில் தடால் என்று தானாக நிலத்தில் விழுந்தது. அதோடு கண்ணீரும் தாரை தாரையாக நிலத்தில் விழுந்தது. இப்படி விழும்படியாக எல்ஒடுங் கியமுகத்(து) இளவல் நின்றனன்]

பிரமித்து நிற்கிறான் லக்ஷ்மணன். முகத்திலுள்ள பிரகாசம், வார்த்தை, கோபம், உணர்ச்சி எல்லாம் அடங்கி விட்டது; — அந்த நிலையில், கையிலிருந்த வில் நிலத்தில் விழுகிறது. அதோடு கண்ணீரும் விழுகிறது. அபூர்வமான நாடக இயல் இது. செய்யுளே அந்த இயலைச் சித்திரித்துக் காட்டுகிறது.



## மத்தியஸ்தம்!

அவர் ஒரு சாதுப் பேர்வழி. நடுத் தெருவில் இரண்டு ஆசாமிகள் சண்டை போட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்து, அவர்களை விலக்கிவிட்டு மத்தியஸ்தம் மூலமாய்த் தங்கள் சச்சரவைத் தீர்த்துக் கொள்ளச் சொன்னார். அதன்படியே, ஆளுக்கு ஐந்து ஆசாமிகளைத் தேடிக் கொண்டார்கள்.

கொஞ்ச நேரம் கழித்து அந்தச் சாது ஆசாமி அதே வழியாக வர நேர்ந்தபோது, தெரு முழுவதும் பலர் சண்டை போட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்துத் திடுக்கிட்டுப் போனார். "என்ன சமாசாரம்?" என்று அவர் விசாரித்ததற்கு, "மத்தியஸ்தர்கள் தங்கள் வேலையைத் தொடங்கி விட்டார்கள்!" என்று பதில் கிடைத்தது!




## 85. போர்க் கோலத்தைப் பார்!

**ப**ரதன் தூரத்தில் வருவதைப் பார்த்து, பகையாளியாக வருகிறான் என்று எண்ணி, கடூரமாகப் பேசி விட்டான் லக்ஷ்மணன். "அப்படி எண்ணியது பிசகு. என்னைப் பார்க்கவே வருகிறான். நீயும் அதைக் காணப் போகிறாய்" என்று சொல்லிவிட்டு நிற்கிறான் ராமன்.

என்றனன் இளவலை
    நோக்கி ஏந்தலும்
நின்றனன்,— பரதனும்
    நிமிர்ந்த சேனையைப்
'பின்தரு(க)' என்று,தன்
    பிரிவிக் காதலில்
தன்துணைத் தம்பியும்
    தானும் முந்தினான்.

[என்றனன் இளவலை நோக்கி: தம்பி லக்ஷ்மணனைப் பார்த்துப் பேசிவிட்டு; ஏந்தலும் நின்றனன்: ராமனும் அப்படியே நின்றான்; பரதனும் நிமிர்ந்த சேனையைப் பின் தருக என்று: பரதனும் தன்னுடன் வந்த பெரிய படையைப் பின்னாலேயே மெள்ள வரட்டும் என்று சொல்லி விட்டு: தன் பிரிவிக் காதலில்: ராமனைப் பிரிந்த ஏக்கத்தோடு: தன் துணைத் தம்பியும்: தன்னுடைய தம்பியான சத்துருக்னனோடு.]

பரதனும் சத்ருக்னனும் ராமனை நோக்கி வருகிறார்கள். பரதன் என்ன விதமாக வருகிறான் பாருங்கள்.

தொழு(து)உயர் கையினன்,
    துவண்ட மேனியன்
அழு(து)அழி கண்ணினன்,
    அவலம் ஈ(து)என
எழுதிய படிவம்ஒத்(து)
    எய்து வான்தனை
முழு(து)உணர் சிந்தையான்
    முடிய நோக்கினான்.

[அவலம் ஈதென எழுதிய படிவம் ஒத்து எய்துவான்தனை: துயரத்தை ஒரு ஓவிய ரூபமாகச் செய்தது போல் வருகிற பரதனை; முழுதுணர் சிந்தையான்: பரதனது கருத்தையும் துயரையும் நன்றாய் அறிந்த ராமன்; முடிய நோக்கினான்: நன்றாக உற்றுப் பார்த்தான்.]

துயரத்தின் உருவமாய் வந்து கொண்டிருந்த பரதனை லக்ஷ்மணனுக்குக் காட்டுகிறான் ராமன்:

கார்ப்பொரு மேனிஅக்
    கண்ணன் காட்டினான்:
'ஆர்ப்புறு வரிசிலை
    இளைய ஐய! நீ
தேர்ப்பெரும் தானையான்
    பரதன் சீரிய
போர்ப்பெரும் கோலத்தைப்
    பொருந்த நோக்(கு)'என.

ஒரு நிமிஷம்கூட இருக்க முடியாதாம். என்னை உடனே புறப்பட்டு வரச்சொல்லி நேற்று ஊரிலிருந்து கடிதம் வந்திருக்கு!" என்றாள் சாரதா.

"ஆகையினால் நீ ஊருக்குப் போகப் போகிறாயாக்கும்! அந்த அருமை அத்தான் இங்கு வரக் கூடாதோ?" என்றான் சேகர்.

"இருக்கும் லீவோ ஒரு மாதம். அந்த லீவில் ஒவ்வொருவராய்ப் பார்க்க வேண்டுமென்று அவரவர்கள் ஊருக்கு வர முடியுமா?" என்றாள் சாரதா.

"அத்தான் கல்யாணத்துக்குக் கூடப் போகாத நீ, இப்பொழுது மட்டும் இப்படித் துடிக்கிறாயே!"

"நானா போக வில்லை? நீங்கள் தான் அழைத்துப் போக வில்லை!"

"நான் என்ன செய்வேன்? வேட்டகத்துக் கல்யாணம் என்றால் யாராவது போகாமல் இருப்பார்களா? பாழாய்ப்போன ஆபீசில் லீவு கிடைக்கவில்லை! — ஆமாம், உன் அருமை அத்தான் உன் கல்யாணத்திற்கு ஏன் வரவில்லை?"

"ஏன் வரவில்லை என்றால் அவருக்கும் உங்களைப்போல் லீவு கிடைக்கவில்லை!"

இந்தச் சமயம் வாசலில் ஒரு டாக்ஸி வந்து நின்றது. அதிலிருந்து இறங்கியவரைப் பார்த்ததும்,. "அத்தானே வந்து விட்டாரே!" என்றாள் சாரதா.

"என் கணவரல்லவா? இவரா உன்னுடைய அத்தான்?" என்றாள் கமலி.

"கமலி, நீயா என் அத்தானின் மனைவி!" என்று ஆசையுடன் கமலியைத் தழுவிக் கொண்டாள் சாரதா.

"கல்யாணத்தின் போது ஒருவரை ஒருவர் சந்திக்காததால் வந்த விபரீதம் இது!" என்றான் சேகர்.

அத்தான் வந்த சந்தோஷம் சாரதாவிற்குத் தாங்க முடியவில்லை. ஒரே குஷி! "அத்தான், ஒரு மாத லீவு முழுவதும் இங்கேயே இருக்க வேண்டும், தெரியுமா?" என்றாள் சாரதா.

"சாரதா! எப்பொழுதும் நீ இப்படி அத்தானையே சுற்றிக் கொண்டிருந்தால் அவர்கள் எப்படித் தனித்துப் பேசுவது?" என்றான் சேகரன்.

அப்பொழுதுதான் சாரதா தன் தவறை உணர்ந்தாள். "கமலியின்மீது பொறாமைப் பட்டோமே, அத்தானின்மேல் நமக்கு இருக்கும் ஆசைதானே அவளுக்கும் இருக்கும்" என்று அவள் சமாதான மடைந்தாள்.

# ஆகாச வெடி

"இன்று காலையில் கல்கத்தாவில் விமான அபாயச் சங்குகள் ஊதின. தென்பட்ட விமானங்கள் நம்மூர் விமானங்கள்தான் என்று தெரிந்ததும் அபாயம் நீங்கி விட்டதாக அறிவிக்கப் பட்டது." —ஒரு செய்தி.

இதற்குப் பதிலாக எதிரி விமானம் வரும்போது ஊதாமல் இருந்துவிட வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறோம்.



"இந்தியாவில் ஏற்பட்ட உணவுப் பஞ்ச நிலையை விசாரிக்க பிரிட்டிஷ் சர்க்கார் ராயல் கமிஷன் ஒன்றை நியமித்தனர். அவர்கள் தயாரித்த அறிக்கை கரையான்களுக்கு இரையாகிக் கொண்டிருக்கிறது." —லண்டனில் ஸ்ரீ ஸாகா.

போகிறது; ராயல் கமிஷனைக் கொண்டு இந்தியர்களின் உணவுப் பஞ்சத்தைத் தீர்க்க முடியா விட்டாலும், கரையான்களின் உணவுப் பஞ்சத்தையாவது தீர்க்க முடிந்தது பற்றிச் சந்தோஷப்படுகிறோம்.



"சீனாவில் நிலக்கரியின் விலை ஒன்றுக்கு 700 மடங்காக உயர்ந்திருக்கிறதாம்." — ஒரு செய்தி.

இந்த விலையில் யாராவது சீனாவில் நிலக்கரியை வாங்குவதென்றால் அவர்கள் காசைக் கரியாக்குகிறார்கள் என்றே சொல்ல வேண்டும்.



"ஹிட்லர் டோக்கியோ சென்றிருக்கிறார்." —முன் வந்த செய்தி.

"ஹிட்லருக்குத் தொண்டையில் ஆபரேஷன் நடந்தது. அதனால்தான் அவரால் பேச முடியவில்லை."

—பின் வந்த செய்தி.

ஹிட்லர் டோக்கியோ சென்றது தொண்டை ஆபரேஷனுக்காக இருக்காது என்றே நமக்குத் தோன்றுகிறது.



"பம்பாய் மிருகக் காட்சிச் சாலையில் ஒரு புலி, பெண் புலி ஒன்றுடன் சல்லாபித்துக் கொண்டிருந்தது. இதைக் கண்ட சகோதரப் புலிகள் இரண்டு அதன்மீது பாய்ந்து பலத்த காயத்தை உண்டு பண்ணின." —ஒரு செய்தி.

இந்த மிருகத்தனமான செய்கைக்கு நாம் வருந்த வேண்டிய அவசியமில்லை.

# கமலியின் கணவன்

செல்லம்

"நாளை மாலை வருகிறேன். ஸ்டேஷனுக்கு வந்து அழைத்துப் போகவும்."

—கமலி.

இந்தத் தந்தியைப் பார்த்ததும் சேகரனுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. குதித்துக்கொண்டு சமையலறைக்கு ஓடினான். "சாரதா, சாரதா!" என்று கூப்பிட்டான். அடுப்பில் வேலையாயிருந்தவள் திரும்பிப் பார்த்து, "என்ன?" என்றாள்.

"கமலியிடமிருந்து தந்தி வந்திருக்கு!"

"யார் கமலி? கல்யாணத்தின் பொழுது உங்களையே வட்டமிட்டுக் கொண்டிருந்தாளே, அவளா?"

"சீ! அதெல்லாம் என்ன? அவளுக்கு உன் மாதிரி பொறுமை கிடையாது."

"ஆமாம்; உன்னதைச் சொன்னால் அப்படித்தான் கோபம் வரும். என்னவென்று வந்திருக்கு?"

"நாளை மாலை வருகிறாளாம். என்னை ஸ்டேஷனுக்கு வரச்சொல்லித் தந்தி அடித்திருக்கிறாள்."

"ரொம்ப சரி, உங்கள் பாடு குஷிதான்! என்னை எங்கே கவனிக்கப் போகிறீர்கள்? ஹூம்!"

"நாளை காலை ஆபீசுக்குச் சீக்கிரம் போக வேண்டும். தூங்கி விடாதே. என்னைச் சீக்கிரம் எழுப்பி விடு. ஆபீஸ் வேலை நிறைய இருப்பதால் கொஞ்சம் சீக்கிரம் போனால்தான் முடியும். மாலையில் ஸ்டேஷனுக்குப் போய்க் கமலியை அழைத்துக் கொண்டு வரவேண்டுமல்லவா?"

"எவ்வளவு தடபுடல்! பேச்சிலேயே ஒரு தனி உணர்ச்சியல்லவா இருக்கிறது! எவ்வளவு ஆசை கமலியென்றால்?"

"இப்படியெல்லாம் அசடு மாதிரி பேசாதே. உன்னிடம் எனக்கு ஆசையில்லையா? போய் வேலையைப் பார்" என்று ஆசையுடன் அவள் கன்னத்தில் லேசாகத் தட்டினான் சேகரன்.

க்ஷணத்தினால் சாரதாவின் முகம் சிவந்தது. வேகமாகச் சமையலறைக்கு ஓடினாள்.

"மணி ஆறு அடித்து விட்டது. எழுந்திருக்கவில்லையா? என்ன தூக்கம்? இதற்குத்தான் மாமியார் வேண்டுமென்கிறது!" என்றான் சேகரன்.

"எனக்குத் தலைவலி மண்டையைப் பிளந்து கொண்டு போகிறது. — அப்பா! அம்மா! பொறுக்க முடியவில்லையே!" என்று முனகினாள் சாரதா.

"வந்து விட்டதா, தலைவலி? சரி, எனக்கு இன்று சனியன் பிடித்தது. ஆபீஸுக்குச் சீக்கிரம் போக வேண்டுமென்று நேற்றே உன்னிடம் சொன்னதின் பலன் இது. உம்......உன்னைச் சொல்லி என்ன பிரயோஜனம்? என் தலை விதி. காப்பிப் பொடி எங்கே வைத்திருக்கிறாய்? சொல்லு. நானாவது அடுப்பைப் பற்ற வைத்துக் காப்பி போடுகிறேன்!" என்றான் சேகரன்.

"காப்பிப் பொடியெல்லாம் ஆகி விட்டது, நேற்றே உங்களிடம் சொல்ல வேண்டுமென்றிருந்தேன். வேலை அவசரத்தில் மறந்தே போய் விட்டேன்!" என்றாள் சாரதா.

"ரொம்ப சந்தோஷம். எனக்கு வேலை மிச்சம். காப்பி சாப்பிட ஹோட்டலுக்குப் போகிறேன். உனக்கும் ஒரு கப் காப்பி வாங்கி அனுப்பி விடுகிறேன். என் சாப்பாட்டை ஆபீஸிலேயே பார்த்துக் கொள்கிறேன். எனக்காக நீ தலைவலியுடன் சிரமப்பட வேண்டாம். சாயங்காலம் கமலியை அழைத்து வரும்பொழுது காப்பி பொடி வாங்கி வருகிறேன். வந்தவர்களை 'வா'வென்று அழைப்பதற்குக் கொஞ்சம் சிரமத்துடனாவது நல்ல உடை அணிந்து கொண்டு சந்தோஷமாயிரு!" என்று கூறி விட்டுச் சென்றான் சேகர்.

அன்று மாலை சேகரன் கமலியை அழைத்துக் கொண்டு வந்தான். உள்ளே நுழைந்ததும் வீடு வெறிச்சென்றிருந்தது. சாரதா தலைவலியுடன் படுத்திருந்தாள். "சேகர்! சாரதாவுக்கு உடம்பு சரியில்லை என்று சொல்லவே இல்லையே! டாக்டரிடம் காண்பித்தாயா?" என்றாள் கமலி.

"இதற்கெல்லாம் டாக்டரிடம் போக முடியுமா?" என்றான் சேகரன்.

சாரதாவின் உடம்பை அன்பாய்த் தொட்டுப் பார்த்து, "என்ன செய்கிறது, உனக்கு?" என்றாள் கமலி.

சாரதா தலைவலியால் ரொம்பவும் கஷ்டப் படுபவள்போல் புரண்டாள். தலைவலி தாங்காமல் துடியாய்த் துடித்தாள். கமலி தைலத்தைத் தேய்த்துக் கைக்குட்டையால் தலையை இறுக்கிக் கட்டினாள். அடுப்பைப்பற்ற வைத்துச் சூடாகக் காப்பி போட்டுச் சாரதாவிற்குக் கொடுத்தாள். சாரதாவும் கொஞ்சம் தலைவலி குறைந்திருக்கிற தென்றும், எல்லோரையும் காப்பி சாப்பிடும் படியும்சொன்னாள்.



"சேகர்! உனக்கு என்ன சமையல் பிடிக்கும் சொல்லு, நொடியில் பண்ணி விடுகிறேன்!" என்றாள் கமலி.

"எதற்கு? பாவம்! ரயிலில் வந்த அலுப்புக்கூட நீங்கவில்லை; அதற்குள் சமையல் செய்கிறேன் என்று சொல்லுகிறாயே? வேண்டாம்! நான் ஓட்டலிலிருந்து வரவழைக்கிறேன். நாம் மூவரும் வேடிக்கையாய்ச் சாப்பிடுவோம்" என்றான் சேகரன்.

"என் கை சமையல் சாப்பிட்டு எவ்வளவு நாளாகி விட்டது! அப்பொழுதெல்லாம், 'ஹோட்டலில் சாப்பிட்டு, சாப்பிட்டு வெறுத்துப் போய்விட்டது, கமலி! உன் கையால் ரசம் சாதமாவது போடேன்!' என்று சொல்வாயே. இதோ, ஒரு நொடியில் ரசம் சாதம் பண்ணுகிறேன். ஹோட்டல் சாப்பாடு எனக்கே பிடிக்காது!" என்றாள் கமலி.

"சரி, உன் இஷ்டம். உனக்கு வேண்டிய ஒத்தாசை வேண்டுமானால் செய்கிறேன். குழாயிலிருந்து தண்ணீர் கொண்டு வரட்டுமா?" என்றான் சேகரன்.

"வேண்டாம், சாமான்கள் இருக்குமிடம் எனக்குத் தெரியாது. கொஞ்சம் எடுத்துக் கொடுத்தால் போதும். அதுவே பெரிய ஒத்தாசை!" என்றாள் கமலி.

சேகரும் கமலியும் சேர்ந்து சமையல் செய்வது சாரதாவுக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை. "ஒரு நாளாவது இந்த மாதிரி எனக்கு ஒத்தாசை செய்திருக்கிறாரா? அத்தையின் பெண் என்றால் மட்டும் என்ன? எதற்கும் ஒரு வரம்பு கிடையாதா? என்ன குஷி! என்ன தமாஷ்!" என்று முணுமுணுத்தாள் சாரதா.

கமலியும் வந்து பத்து நாட்களாகி விட்டன. வீட்டில் சாரதா கலகலப்பாகவே பேசுவது கிடையாது. சேகர் ஏதாவது சொன்னால் எரிந்து விழுவாள். கமலியும் சேகரும் சேர்ந்து விளையாடுவதும், தமாஷாய்ப் பேசுவதும், வேடிக்கைக்காகத் தன்னைப் பரிகாசம் செய்வதும் சாரதாவிற்கு எரிகிற கொள்ளியில் எண்ணெய் வார்த்தது போல் இருந்தது.

"இவள் புருஷன் என்ன மடையனா? பிறத்தியார் வீட்டில் இப்படி விட்டு விட்டுப் பேசாமல் இருக்கிறானே! கமலி இன்னும் ஒரு மாதம் இருந்துவிட்டுப் போகவேண்டுமென்கிறாரே, அவர்! அவள் இங்கு இருந்தால் நான் பிறந்த வீடு போக வேண்டியது தான்!" என்றெல்லாம் தனக்குத் தானே எண்ணிக் கொண்டாள் சாரதா.

ஒரு நாள், "உன்னைக் காணுமென்று சேகர் தவியாய்த் தவிக்கிறானே! இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறாய்? வா!" என்று சாரதாவின் கையைப் பிடித்து இழுத்தாள் கமலி.

"நான் எதற்கு? 'வர முடியாது' என்று சொல்லிவிடுங்கள்" என்றாள் சாரதா.

"இவ்வளவு கோபமா, ராணிக்கு?" என்று கேட்டுக்கொண்டே சேகர் அங்கு வந்தான். கமலி 'கொல்' என்று சிரித்தாள்.

"என்னை அவமானப்படுத்த வேண்டுமென்றுதானே இரண்டு பேரும் சேர்ந்து கங்கணம் கட்டிக்கொண் டிருக்கிறீர்கள்? நான் அசடு என்றால் இப்படியா என்னைப் பரிகாசம் செய்வது? உங்களுக்குக் கமலி இருக்கும்பொழுது என்னை என் வம்புக்கு இழுக்கிறீர்கள்?" என்றாள் சாரதா.

"வேடிக்கைக்காக ஏதாவது சொன்னால் இப்படி என்னை மிரட்டுகிறாயே! அப்புறம் என்ன செய்வது, சொல்லு!" என்றான் சேகரன்.

"சொல்லட்டுமா? என் அத்தான் ஈரானிலிருந்து ஒருமாத லீவில் ஊருக்கு வந்திருக்கிறாராம். அவருக்கு என்னைப் பார்க்காமல்



# இப்படி நேரும்படி விட்டிருக்க மாட்டீர்கள்.

அனாவசியமானவற்றை நீங்கள் வாங்கும்போதெல்லாம், உண்மையிலேயே நேருவதென்ன? அநேகப் பொருட்களின் விலைகள் அளவு கடந்து உயர்வாயிருக்கின்றன. உங்களுக்கு உண்மையிலேயே தேவையில்லாத பொருட்களை வாங்கும் போதெல்லாம் உங்கள் பணத்தை இழக்கிறீர்கள். வாங்கியே தீரவேண்டுமென்னும் அவசியம் நேர்ந்தாலல்லது எதையும் வாங்காதீர்கள். யுத்தகால விலைகளால் பணத்திற்கேற்ற பொருட்கள் கிடைப்பதில்லை.

நகை, நிலம், கட்டடம், பண்டங்கள், செய்பொருட்கள் ஆகிய எதை வாங்கினாலும் உங்கள் பணத்திற்கு நஷ்டம் ஏற்படக் கூடும். அவற்றின் விலைகள் ஏற்றத் தாழ்வுகளுக்கு உள்ளாகும். இப்போது விலை இறங்கிக் கொண்டிருக்கிறதே தவிர உயரவில்லை என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்.

## உங்களால் இயன்றவரை மிச்சப் படுத்துங்கள். மிச்சப் படுத்தியதை முதலீடு செய்யுங்கள்.

இந்த முதலீடுகள் பந்தோபஸ்தானவை, இலாபகரமானவை:-

* இன்ஷூரென்ஸ்,
* கூட்டுறவு சங்கங்கள்,
* சேமநிதி,
* தபாலாபீஸ் சேமநிதி,
* அரசாங்கக் கடன் பத்திரங்கள்,
* நேஷனல் சேவிங்ஸ் செர்டிபிகேட்கள்.

பாதுகாப்பான முதலீட்டினால் கிடைக்கக் கூடிய இலாபம் குறைவாயிருக்கலாம். முதல் பந்தோபஸ்தாயிருக்கிறது; யுத்த காலத்தில் அதுதான் முக்கியம்.

தேசியப் போர்முனையார் விடுக்கும் தேசிய வேண்டுகோள்

AAA 1112 TM

அழகு பார்த்துக் கொள்ளும்போது நாம் அடையும் பெருமைக்கும் கர்வத்துக்கும் ஈடேது, இணையேது? உடனே வெள்ளை ஆடையுடன் இருக்கும்போது நாலு பேர் முன்பாக நடந்து விட்டு வரலாமென்று நினைப்பேன். சென்னையில் ஓடும் இராணுவ லாரிகள் மனிதர்களுடைய உயிர்களுக்குச் சேதம் விளைவிப்பதோடு மட்டும் இல்லை. அவர்கள் வெண்மையாக உடுத்திக் கொண்டு போகும் ஆடைகளைச் சேதப் படுத்தவும் அவைகளுக்குத் தெரியும்!

நான் தெரு வழியே போய்க் கொண்டிருந்த போது மழை ஜலம் ரோடுகளில் அங்கங்கே குட்டை குட்டையாய்த் தேங்கி யிருந்தது. பின்னால் வேகமாய் வந்த லாரியின் சக்கரம் குட்டை ஜலம் அவ்வளவையும் வாரி என் வேஷ்டிமேல் இறைத்து விட்டு ஓடிற்று. அந்தத் திவ்ய அலங்கோலத்தை மறைக்க மெதுவாக வேஷ்டியை முட்டிக்கு மேல் மடித்துக் கட்டிக் கொண்டு, லாரியைச் சபித்துக் கொண்டே யாரும் பார்ப்பதற்கு முன் வேகமாய் நடந்து வீட்டை அடைந்தேன்.

மனித வர்க்கத்தின் அந்தஸ்தையும் கௌரவத்தையும் காப்பாற்றித் தரும் இந்த ஆடைகளின் அந்திய நாட்களையும் அவைகளின் கதியையும் நினைக்கும் போது என் மனம் பரம சஞ்சலத்தை அடைகிறது.

நதிகள் எப்படி தேசத்தின் நாலா திசைகளிலும் பாய்ந்து ஓடிக் கடைசியில் சமுத்திரத்தைச் சங்கமமடைகிறதோ, அதேமாதிரி நமது துணிகளும் அந்திய காலத்தில் ஜாடிக்காரனைச் சரணடைந்து விடுகின்றன.

என்னுடைய வேஷ்டிகள், ஜிப்பாக்கள், ஒரு மாமாங்கத்துக்கு முன் என் மாமனார் வாங்கிக் கொடுத்த கோட்டு எல்லாம் என்னை விட்டுப் பிரிந்து ஜாடிக்காரனை அடைந்து விட்டன! ஆயுள் காலத்தில் பாதி நாட்கள் என்னுடன் பழகி என்னுடைய சுக துக்கங்களிலும், குளிர் வெப்பத்திலும் பங்கெடுத்துக்கொண்டு, அந்திய நாளில் அவை என்னை விட்டுப் பிரியும்போது நான் அடையும் வருத்தம் கொஞ்ச நஞ்சமல்ல. இதைப் பற்றி நினைக்கும் போதே என் கண்களில் ஜலம் பெருகுகிறது. கைக்குட்டையைத் தேடுகிறேன். அதைக் காண வில்லை.— ஓஹோ! அது காடாறு மாதம் வாசம் செய்யப் போயிருக்கிறது போலும்!



# படித்துப் பார்!

## வீணை

[ஆக்கியோன்: கோட் வாத்தியம் வி. எஸ். பார்த்தசாரதி ஐயங்கார்: பிரசுரம்: ஸ்ரீ கான வித்யா பிரஸ், ஸ்ரீவைகுண்டம்: விலை: முதல் பாகம்: 0—9—0 இரண்டாம் பாகம்: 0—12—0.]

கர்நாடக சங்கீதம் தோன்றின அன்றைக்கே வீணையும் தோன்றி விட்டது. சகல கலாவல்லியான சரஸ்வதியின் கையில் இலங்குவது வீணை; நாரத கானத்தை நாடெங்கும் பரப்புவது வீணை. இந்த வாத்யத்தைச் சாதகம் செய்வது மிகவும் சிரம சாத்தியமானது. வீணை கற்க முயல்வது வீணான காரியம்,— என்று நினைப்பவர்களுக்கு இந்நூல் தைரிய மூட்டி, வீணையைச் சுலபமாகக் கற்பதற்கு வேண்டிய வழியைக் காட்டுகிறது. சங்கீதத்தை அக்கு வேறு ஆணி வேறாகப் பிரித்து அலசிய பிறகு, இப்புத்தகாசிரியர், வீணையையும் அக்கு வேறு ஆணி வேறாகப் பிரித்து ஒவ்வொரு பாகத்தையும் பற்றிப் புரியும்படி எழுதியிருக்கிறார்.

## பத்திய உணவு

[ஆசிரியர்: இ. லக்ஷ்மண சர்மா; பிரசுரம்: இயற்கை இல்லம், புதுக்கோட்டை; விலை அணா 6.]

"இளங் காய் கறிகளைத் துணித்து, தேங்காய்த் துருவல், பச்சைக் கொத்துமல்லி சேர்த்து, சமையலில்லாமல் சாப்பிடலாம்" என்று வாசிக்கும்போதே, இதைவிட ரஸமான புஸ்தகம் வேறு இருக்க முடியாதென்று தீர்மானிக்கலாம். இன்னும், ரஸம், குழம்பு, வெள்ளரிப் பிஞ்சு, இளம் தேங்காய் எல்லாம் புஸ்தகத்தில் வந்து, நாக்கில் ஜலம் ஊறச் செய்கின்றன. பிரபல இயற்கை வைத்தியரான ஸ்ரீ லக்ஷ்மண சர்மா, ஆகாரங்கள் மூலமாகவே ஆரோக்கியத்தை மட்டுமல்ல, மனிதனின் குணத்தையே கட்டுப்படுத்தலாம் என்ற கொள்கையை இப்புஸ்தகத்தில் வற்புறுத்துகிறார்.

## பிலிப்பைன் வீழ்ச்சி

[ஆசிரியர்: ஆ. நடராஜன்; பிரசுரம்: சக்தி காரியாலயம், சென்னை, மதுரை; விலை: அணா 4.]

எண்ணிறந்த பல தீவுகளைக் கொண்ட பிலிப்பைனின் உரிமை வேட்கை மிகுந்த பிலிப்பினோக்களை ஸ்பானியக் கொடுங்கோலாட்சி எவ்விதம் ஒடுக்கியது, பிறகு அமெரிக்கர்கள் ஸ்பானியரை விரட்டியடித்துப் பிலிப்பைன் தீவைப் பறித்துக் கொண்டது, பின்பு ஜப்பானியரின் படையெடுப்புக்கு இலக்கானது—முதலிய விவரங்கள் சாங்கோபாங்கமாக இந்நூலில் விவரிக்கப் பட்டிருக்கின்றன.

பிலிப்பைன் வீழ்ச்சியில் ஆசிரியர் கையாண்டிருக்கும் கவர்ச்சிகரமான தமிழ் நடை தமிழ் மக்களுக்கு ஒரு எழுச்சியைக் கொடுக்கும் என்பதில் ஐயமில்லை.

# ஆடைபுராணம்

சாவி

பெரிய மனிதர்களைப் பேட்டி காண வேண்டுமா? தேனீர் விருந்துக்குப் போகவேண்டுமா? கல்யாணம், கார்த்திகைக்குச் செல்ல வேண்டுமா? பாட்டுக் கச்சேரி, பரத நாட்டியம் ரஸிக்க வேண்டுமா?—இன்னும் எந்தக் காரியமாயினும் சரி; எல்லாவற்றுக்கும் முதலில் வேண்டியது வெள்ளை வெளேரென்ற ஆடைதான்! ஆனால் இப்படிப்பட்ட ஆடைகள் நம்முடன் எப்போதும் சேர்ந்தே இருப்பதில்லை. விக்ரமாதித்தன் காடாறு மாதம் நாடாறு மாதமாக வாழ்ந்து வந்ததைப்போல் நமது ஆடைகளும் சலவைத் தொழிலாளியிடம் பாதி நாட்களும், நம்மிடம் பாதி நாட்களுமாய்க் காலத்தைக் கழிக்கின்றன. இம்மாதிரி சமயங்களில், நாம் நமது சலவைத் தொழிலாளியை ஸ்மரிப்பதைப் போல் கடவுளை மட்டும் ஸ்மரித்திருந்தால் இதற்குள் மோட்ச சாம்ராஜ்யத்தையே அடைந்திருக்கக் கூடும்.

★

மனிதன் பிரம்மசரியத்தி லிருந்து கிருகஸ்தனாக மாறியதும் பல கஷ்டங்களுக்கு உள்ளாக நேரிடுகிறது. அந்தக் கஷ்டங்களில், அவன் கல்யாணமானதும் எட்டுமுழ வேஷ்டியைக் கட்ட வேண்டுமென்பதும் ஒன்றாகும். அப்படிக் கட்டுவதிலும் முனைகளைக் கீழே தொங்கவிடக் கூடாதாம். பஞ்ச கச்சம் வைத்தே கட்ட வேண்டுமாம். இதற்கு ஒரு அழகான காரணமும் சொல்கிறார்கள்:

மனிதனிடமுள்ள மின்சார சக்தி வேஷ்டி முனை வழியாகக் கீழே இறங்கிப் போய் விடுமாகையால் அவனுக்கிருக்கிற ஞாப சக்தியும் குறைந்து போய் விடுமாம். அதற்காகவே மூலையை மடித்துக் கட்டச் சொல்லியிருக்கிறதாம். இருக்கலாம்; ஆனால் இந்தக் காலத்தில் மனிதன் கல்யாணம் ஆனதுமே எல்லா சக்திகளையும் தான் இழந்து விடுகிறானென்பதை முன்னோர்கள் அறியவில்லை போலிருக்கிறது.

ஆடைகள் விஷயத்தில் நமது முன்னோர்கள் பல வித்தியாசங்களை நிர்ணயித்திருக்கிறார்கள். ஸ்திரீகள் பதினெட்டு முழத்தில் வர்ணச் சேலைகள் உடுத்த வேண்டும் என்றும், ஆண்கள் எட்டு முழ நீளத்தில் வெள்ளை உடை உடுத்த வேண்டுமென்றும் நிர்ணயம் செய்திருக்கிறார்கள்.

தலைக்கு வருஷத்துக்குப் பன்னிரண்டு கஜம் துணியே விநியோகம் செய்யப் போகிறோம் என்று சர்க்கார் சொல்கிறார்கள். சர்க்கார் ரேஷன்படி பார்த்தால் பதினெட்டு முழப் புடவை கட்டும் ஸ்திரீகளுக்கு வருஷத்தில் ஒன்றேகால் புடவையே கிடைக்கக் கூடும்! சர்க்கார் துணிகளையும் ரேஷன் செய்து கொடுக்கப் போகிறார்கள் என்பதைப் பெரியவர்கள் முன் கூட்டியே அறிந்திருந்தால் இப்படி நிர்ணயம் செய்திருப்பார்களா?

ஸ்திரீகள் விதம் விதமான ஆடைகளைக் கட்டவே பிறந்தவர்கள் என்பது என் எண்ணம். ஆனாலும் என் மனைவிக்குத் தெரிந்த ஸ்திரீகள் நல்ல புடவைகள் உடுத்துவதை மட்டும் நான் சிறிதும் விரும்பவில்லை. விரும்பினாலும் அவர்கள் கட்டிக்கொண்டிருக்கும் புடவை என் மனைவியின் கண்களில் படுவதை நான் அடியோடு விரும்பவில்லை. ஒரு கதையைக் கேளுங்கள்:

"நேற்று என் மனைவியின் கண்ணில் ஒரு புடவை பட்டுவிட்டது. அதற்குக் கண் வைத்தியச் செலவு ஐந்து ரூபாய் ஆயிற்று" என்றார் ஒருவர்.

"பூ! இவ்வளவுதானா? நேற்று என் மனைவியும் நானும் கடைத் தெரு வழியாகச் சென்று கொண்டிருந்த போது என்னுடைய மனைவியின் கண்களில் ஒரு பட்டுப் புடவை பட்டுவிட்டது. உடனே எனக்கு 150-ரூபாய் செலவு!" என்றார் மற்றவர்.

★

அன்று ஞாயிற்றுக்கிழமை. எனக்குப் பொழுது போகாததால் அப்பொழுதுதான் சலவையாகி வந்த உடுப்பை எடுத்து மாட்டிக் கொண்டேன். நன்றாய் வென்னீரில் ஸ்நானம் செய்து விட்டு, மூட மூடவென்றிருக்கும் சலவைத் துணிகளை உடுத்திக் கண்ணாடி முன் கிராப்பை வாரி, நம்மை நாமே

# நீதி நாயகம்

**சுவாமி சுத்தானந்த பாரதி**

எளிய நடைப் புலவர்; தமிழ் உரை நடைக்கு வழி காட்டியவர்; முதல் நாவலர்; பெண் கல்விக்கும், சமூக சீர்திருத்தத்திற்கும் உழைத்த தொண்டர்; ஏழை எளியவருக்கு இரங்கும் வள்ளல்; உள்ளத்தை அள்ளும் சமரசக் கீர்த்தனங்களைப் பாடிய மகான். யார்? வேத நாயகம் பிள்ளை; தமிழ் இருக்குமட்டும், தமிழர் உள்ள மட்டும் வேதநாயகம் பிள்ளையின் புகழும் திகழும்.

திருச்சிராப்பள்ளிக்கருகே குளத்தூர் என்னும் சிறிய கிராமம் உள்ளது. அதில் சவரிமுத்துப் பிள்ளை என்னும் கத்தோலிக்க பக்தர் ஆரோக்கிய மரியம்மையுடன் இல்லறம் காத்து வந்தார். இவர்களுக்குப் போதிய நிலபலன்கள் உண்டு; இருவரும் சிறந்த தெய்வ பக்தர்; மாசற்ற அன்பர். சவரிமுத்துப் பிள்ளை தேம்பாவணி படிப்பதும், சுவிசேஷங்களை ஓதுவதும், கீதம் பாடுவதும் ஜெகமேரி ஜபம் செய்வதும், வந்தவருக்கு விருந்தளிப்பதுமாக வாழ்ந்தார். இவர்களுக்கு ஒரே கவலைதான் இருந்தது — பிள்ளைக் கவலை.

ஒரு நாள் ஒரு பரதேசி குளத்தூருக்கு வந்தார். அவருக்கு நல்ல பசி; தெரு வழியே கையேந்திச் சென்றார்; யாரும் அவர் முகத்தைப் பார்க்கவில்லை. ஒரு வீட்டுக்கெதிரே அவர் சோர்ந்து படுத்து விட்டார். அப்போது, "உனக்கு நீ எப்படியோ அப்படி எல்லாருக்கும் நட; ஏழை முகம் பார்த்துப் பசி தீர்......" என்றெல்லாம் பைபிள் நீதி படித்துக் கொண்டிருந்தார் சவரிமுத்து. "வேதமும் நீதியும் புத்தகத்திலேதான்; தன் பசி போலப் பிறர் பசி நீக்கும் தருமவான் எங்கே...... கடவுளே" என்று பரதேசி பெருமூச் செறிந்தார்.

கேட்டார் சவரிமுத்து: சோர்ந்த முகத்தைக் கண்டார். உடனே உள்ளே ஓடி, "ஒரு சட்டியில் சாதமும் குழம்பும் பிசை" என்றார் மனைவியிடம்; மரியம்மை உடனே சோறு பிசைந்து கொண்டு காயகறியுடன் வந்தாள். "ஐயா, சாப்பிடும்" என்றார் சவரியார். பரதேசி மிக்க மகிழ்ச்சியுடன் மரியாள் கையால் சோறு வாங்கி ஆவலாக உண்டார். அம்மை மோர் கொடுத்தாள்; பரதேசி குடித்து ஓர் ஏப்பம் விட்டுப் பல வாழ்த்துரைகள் கூறி, முடிவில் "எத்தனையோ பேர் ஏட்டைப் படிக்கிறார்கள்; நீதி பேசுகிறார்கள்; கை கருணைக்கிழங்கு, மனம் கருங்கல்லாயிருக்கின்றன. நீரே நீதி நாயகம்; உமக்கொரு வேத நாயகம் பிறப்பான்" என்றார். இதைக் கேட்டு மரியாள் மனம் குளிர்ந்தது. சவரிமுத்துவின் மனம் மிக்க மகிழ்ச்சியடைந்தது. வேதநாயகம் அவர் கண்முன் தவழ்ந்தான். "ஐயா! கொஞ்சம் சோறு கட்டித் தருகிறேன். இரவிற்கு வைத்துக் கொள்ளும்" என்றார் சவரி.

"பகல் கணக்கைத் தீர்த்தவன் இரவுக் கணக்கைத் தீர்ப்பான்: கர்மத்தைக் கட்டிச் செல்வானேன்! — இந்த உடற்சுமையே போதுமப்பா; உன் குலம் விளங்கட்டும்" என்று பரதேசி ஆசி கூறிச் சென்றார்.

மறு மாதமே மரியம்மை கருத்தரித்தாள்; சவரி முத்தருக்குத் தங்கம் போலக் குழந்தை பிறந்தது. அக் குழந்தைக்கு வேதநாயகம் என்றே பெயரிட்டு அருமையாக வளர்த்து வந்தனர்.

**ஓதி யுணர்வ துயர்வே;**
**அதனினும்**
**ஈது துயர்வென்**
**றியற்றுகவே — நீதிமொழி**
**கிண்டும் பசிக்குக்**
**கிடைக்குஞ்சோ றுகிடுமோ!**
**உண்டபின் ஞானம் உரை.**



கண்டக்டர் (டிரைவரிடம்): இரு அப்பா! அவசரப்படாதே! ஏற வரவங்களுக்காக நீ அவசரப்பட்டீன்னு இறங்கறவங்க இறங்க வேண்டாமா! இப்பத்தானே கூரையிலே ஒத்தர் துள்ளிபோட்டிக்கிட்டிருக்கார்!

நான் இரைந்து கத்திக் கூப்பிட்டுப் பார்த்தேன். யாரோ ஒருவன் தோட்டத்தில் மறைந்து கொண்டு நான் கூப்பிடும் பொழுதெல்லாம் அவனும் என்னைக் கூப்பிட்டு வாயில் வந்தபடியெல்லாம் திட்டுகிறான். அப்பா, நேற்று என்னிடம் 'நீ மஹாராஜாவின் குமாரன், உன்னை ஒருவரும் ஒன்றும் செய்ய முடியாது!' என்று சொல்லவில்லையா? நமது அரண்மனைத் தோட்டத்துக்குள்ளேயே ஒருவன் புகுந்து கொண்டு என்னை இப்படி அவமதிக்கிறானே! நாளைக்கு அவன் இன்னும் என்னதான் செய்ய மாட்டான்? அவனைக் கண்டு பிடித்துத் தகுந்த தண்டனை கொடுக்க வேண்டும். அப்பொழுதுதான் என் மனம் சமாதானமடையும்'' என்றான் விக்கிரமன்.

"நம் அரண்மனையில் உன்னை அவமதிப்பவனும் இருக்கிறானா? இது என்ன அக்கிரமமாயிருக்கிறது! யார் அந்த அயோக்கியன்? வா, வஸந்த மண்டபத்துக்குப் போய் அவனைக் கண்டு பிடிப்போம்!'' என்று கூறி, மஹாராஜா விக்கிரமனை அழைத்துக் கொண்டு போனார்.

வஸந்த மண்டபத்துக்குப் போனதும், ''குழந்தாய், எங்கே அவன்?'' என்று கேட்டார் மஹாராஜா.

''அடே, திருட்டுப் பயலே! வா, வெளியே! என் அப்பா வந்திருக்கிறார். இனிமேல் நீ தப்ப முடியாது!'' என்றான் விக்கிரமன்.

அப்பொழுதாவது அந்தப் போக்கிரி சும்மா இருக்க வேண்டுமே! ஊஹூம்...... அவனும் விக்கிரமன் சொன்ன மாதிரியே சொன்னான்.

''பார்த்தாயா, அப்பா! உனக்கு எதிரிலேயே திட்டுகிறானே! அவனுக்கு என்ன தைரியம்?'' என்று கூறி விக்கிரமன் பதறினான்.

மஹாராஜாவுக்கு இப்பொழுது கூடக் கூடப் பேசும் போக்கிரி யார் என்று தெரிந்து விட்டது. அவர் கடகட வென்று நகைத்தார். ''குழந்தாய், அவசரப்படாதே! இப்பொழுது நான் சொல்வதைக் கேள். 'என் பிரிய முள்ள நண்பனே! இங்கே வா!' என்று கூப்பிடு. பார்க்கலாம்'' என்றார் அன்புடன்.

அப்பா சொன்ன மாதிரியே விக்கிரமன் கூப்பிட்டான். அந்தக் குரலும் அதே மாதிரி அன்புடன் அழைத்தது. விக்கிரமனுக்கு அதிசயம் தாங்க முடியவில்லை. ஆச்சரியத்தினால் அவன் பிரமித்து நின்று விட்டான்.

''குழந்தாய்! நீ எப்போதும் எல்லோரிடமும் அன்பு காட்ட வேண்டும். நீ ஒருவனிடம் அன்பு காட்டினால் தான் அவனும் உன்னிடம் அன்பாய்ப் பேசுவான். அன்பைக் கொடுத்துத் தான் நாம் அன்பை வாங்க வேண்டும். நீ பேசியபொழுது உன்னுடன் எந்தப் போக்கிரிப் பயலும் பேசவில்லை. எதிரொலிதான் பேசியது. பெரிய கட்டடங்களிலும் மலைப் பிரதேசங்களிலும் எதிரொலி உண்டாகும். வேறு ஒன்றுமில்லை; பயப்படாதே!'' என்றார் மஹாராஜா.

''அப்பா! இனிமேல் நான் பயப்பட மாட்டேன். எதிரொலி என் தோழன். பிறரிடம் அன்பு காட்ட வேண்டுமென்று எதிரொலியினால் தானே எனக்குத் தெரிந்தது? இனிமேல் யாரிடமும் கடுகடுப்புடன் இருக்க மாட்டேன்'' என்றான் விக்கிரமன்.



பாப்பா மலர்:

# அதிசய மண்டபம்

ஸோமாஸ்

அன்று காலையில் விக்கிரமன் வழக்கம்போல் வஸந்த மண்டபத்துக்கு விளையாடப் போனான். அவன் தோழர்கள் ஒருவரும் அன்று வரவில்லை. விக்கிரமன் மட்டும் தனியாக மண்டபத்தில் இருந்தான். அவனுக்குக் கோபம் கோபமாக வந்தது.

“அடேய்! எல்லோரும் எங்கே ஒளிந்து கொண்டிருக்கிறீர்கள்? வாருங்கள் வெளியே!” என்று கத்தினான்.

உடனே ஒரு குரல், “அடேய்! எல்லோரும் எங்கே ஒளிந்து கொண்டிருக்கிறீர்கள்? வாருங்கள் வெளியே!” என்று பதிலுக்குப் பதில் அவனை மிரட்டியது.

விக்கிரமன் அசாத்தியக் கோபத்துடன், “அடே மடையா, யாரடா அவன்? கொஞ்சங்கூட மரியாதையில்லாமல் பேசுகிறவன்? ஆளை விட்டுப் பிடித்து வந்து நன்றாய் உதைக்கிறேன், பார்!” என்று சீறினான்.

உடனே யாரோ அவன் சொன்னபடியே சொல்லி, “உதைக்கிறேன், பார்!” என்று பதிலுக்குப் பதில் சீறினர்.

விக்கிரமனுக்கு வந்த கோபத்துக்கு அளவே இல்லை. கோப மிகுதியில் அவன் தேகம் முழுவதும் நடுங்கியது. மஹாராஜாவின் மகனான அவனை ஒருவன் அவமதிப்பதென்றால் அவனுக்குக் கோபம் வருமா, வராதா?

ஆத்திரத்துடன் விக்கிரமன் துக்கம் தொண்டையை அடைக்க, “அடே, அயோக்யப் பயலே! என் அரண்மனை நந்தவனத்தில் ஒளிந்து கொண்டிருக்கும் திருட்டுப் பயலே! வா, வெளியே! உன்னை என்ன செய்கிறேன், பார்!” என்று கத்தினான்.

என்ன ஆச்சரியம்! ஒளிந்து கொண்டிருக்கும் அந்தப் போக்கிரிப் பயல், ராஜகுமாரனுக்குக் கொஞ்சங்கூடப் பயப்படவில்லை. பலமாக ராஜகுமாரனை எதிர்த்து அவனைப் போலவே மிரட்டினான்.

விக்கிரமனால் இதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. பீறிட்டுக் கொண்டு அழுகை வந்து விட்டது. வேகமாக அரண்மனைக்குள்ளே ஓடி, அப்பாவிடம் போனான்.

“அப்பா, அப்பா! நமது வஸந்த மண்டபத்தில்......” என்று சொல்லும் பொழுதே விக்கிரமனால் மேலே பேச முடியவில்லை. துக்கம் தொண்டையை அடைத்தது. ‘ஓ’ என்று அழ ஆரம்பித்து விட்டான்.

விக்கிரமன் அழுவதைப் பார்க்க மஹாராஜாவால் பொறுக்க முடியவில்லை. “குழந்தாய், விக்கிரமா! உன்னை யார் என்ன செய்தார்கள்? ஏன் அழுகிறாய்?” என்று கேட்கும் போதே மஹாராஜாவின் குரலும் துக்கத்தினால் கம்மி விட்டது.

“அப்பா! வஸந்த மண்டபத்துக்கு நான் விளையாடப் போனேன். அங்கே என் தோழர்கள் ஒருவரையும் காணவில்லை.

# காலக்ஷேபம்

### நடந்த விஷயம்!

**விமலா:**—என்னோடு காலேஜில் படித்தானே சுந்தர், அவனை நான் கல்யாணம் செய்து கொள்ளவில்லை என்றால் உயிரையே விட்டுவிடுவேன் என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

**கமலா:**—அப்படியா? அப்புறம் என்ன செய்தான் பாவம்!

**விமலா:**—செய்வது என்ன? நான் அவனைக் கலியாணம் செய்து கொண்டு விட்டேன். —ஆர். வி. ஸ்ரீனிவாசன்.



### புதுக் காரணம்

**எஜமானி** (பால்காரனிடம்):—இன்றைக்குப் பால் தண்ணியா யிருப்பதற்குப் புதுசா என்ன சாக்குச் சொல்லப் போகிறாய்?

**பால்காரன்:**—மாடு இன்றைக்குப் பூராவும் மழையில் நனைஞ்சுக்கிட்டு இருந்ததம்மா!

—ஜானு.



### கேள்வியும் பதிலும்

**அடுத்த ஊர்வாசி** (உள்ளூர் வாசியை):—ஐயா! இங்கு தங்க வீடு கிடைக்குமா?

**உள்ளூர் வாசி:**—இது என்ன குபேரப் பட்டணமா? கல் வீடுதான் கிடைக்கும்!

—ராமரத்னம்.



### எலிக்குப் பயம்

**கணவன்:**—இப்போது நம் வீட்டுக்கு ஒரு எலிப் பொறி அவசியம் வாங்கியாக வேண்டும்.

**மனைவி:**—ஏன், நம் வீட்டில் ஏற்கெனவே ஒரு எலிப் பொறி இருக்கிறதே, அது என்ன ஆச்சு?

**கணவன்:**—அதுவா! அதுக்குள்ளே ஒரு எலி அகப்பட்டுக் கொண்டிருக்கிறது!

—ஜயம்.

### எப்படித் தெரியும்?

**கண் வைத்தியர்** (நோயாளியைப் பார்த்து):— இதோ, சுவரில் எழுதியிருப்பதைப் படியும், பார்க்கலாம்.

**நோயாளி:**—முடியவில்லையே!

**கண் வைத்தியர்:**—என்ன ஐயா. வேடிக்கையா யிருக்கே? இவ்வளவு பக்கத்தில் இருந்துமா கண் தெரியவில்லை?

**நோயாளி:**—எனக்குக் கண் தெரிகிறதய்யா; படிக்கத்தான் தெரியாது!

—ஆ. ஏழுமலை.



### எழுப்ப வேண்டியதுதான்!

**தாயார்:**—ஏண்டா மாமாவை எழுப்பறே? அசந்து தூங்கறச்சே எழுப்பக் கூடாதுடா!

**பையன்:**—இல்லேம்மா; மாமாவைத் தேள் கொட்டிடுத்து; அதுக்குத்தான் எழுப்பறேன்! —ராஜி.



### நல்ல பேர்வழி

**பட முதலாளி** (டைரக்டரை நோக்கி):—நாம் தயாரிக்கும் இப்படத்தின் ஒரு பாகத்தில் மனம் தளர்ந்து நிலை தடுமாறி நடக்கும் ஒரு பாத்திரமாக நடிக்க நம்மிடம் ஒருவரும் இல்லையே?

**டைரக்டர்:**— அதற்கென்ன! ஆனி மாதக் கடைசியில் வரனுக்காக அலைந்து விட்டு ஏமாற்றத்துடன் வீடு திரும்பும் ஒரு பேர்வழியைப் பிடித்துப் போட்டால் போகிறது! —எம். கே. செய்த்.



### நிறுத்திவிட்டார்!

**நண்பர்** (நோயாளி சிநேகிதரிடம்):—என்ன ஐயா! டாக்டரிடம் போயிருந்தீராமே, உங்களைப் பார்த்துவிட்டு என்ன சொன்னார்?

**நோயாளி:**—அதுவா! என் இருதயம் பலவீனமாக இருக்கிறதாம், சுருட்டுக் குடிப்பதை நிறுத்த வேண்டும் என்றார்.

**நண்பர்** (ஆச்சரியத்துடன்):— அப்படியானால், சுருட்டுக் குடிப்பதை நிறுத்தி விட்டீரா?

**நோயாளி:**— இல்லை, டாக்டரிடம் போவதை நிறுத்தி விட்டேன்!

—ஆர். வெங்கடாச்சாரி.

# தமிழ் மக்களின் நன்றி

சென்ற வாரம் குறிப்பிட்டிருந்தபடி பாரதியார் நிதிக்காக பம்பாய்த் தமிழ் அன்பர்களிடமிருந்து வந்த ரூ. 500-க்கு விவரம் :

ரூ. 51 நன்கொடை : ஸ்ரீ வி. கே. மேனன். ரூ. 25 நன்கொடை அளித்த அன்பர்கள் : ஸ்ரீமான்கள் கே. எஸ். ராமச்சந்திர அய்யர், டி. கே. சுப்ரமணியம், எச். சிவராம கிருஷ்ணன், தென்னிந்திய சங்கீத சபை, இந்தியன் பைன் ஆர்ட்ஸ் ஸர்க்கிள் ; ஓர் அபிமானி. ரூ. 15 நன்கொடை : டாக்டர் எஸ். எஸ். கிருஷ்ணன், ஏ. ராஜகோபாலன். ரூ. 11 நன்கொடை : டாக்டர் காம்தார். ரூ. 10 நன்கொடை : ஸ்ரீமான்கள் என். கே. அய்யர், என். சாவியாமகவரன், வி. ஜி. ராமன், பி. ஆர். சுப்ரமணிய அய்யர். ரூ. 5 நன்கொடை : ஸ்ரீமான்கள் பி. ஆர். வெங்கடேசுவரய்யர், ஏ. எஸ். ராமராவ், துளசிதாஸ் என். நாதானி என். எஸ். அப்பாத்துரை ஐயர், டாக்டர் என். பத்மனுபய்யர், எஸ். வி. முத்துஸ்வாமி, பி. எம். தேவன், கே. வி. ஷெட்டி, கே. ஜி. கிருஷ்ணய்யர், எஸ். சாரங்கபாணி, டாக்டர் கிருஷ்ணஸ்வாமி, நாகநாதய்யர், வி. எஸ். கோபாலன், கல்விடை ஆர். சங்கரய்யர், ராமானுஜம், வி. அனந்தராமன், எம். ஆர். கிருஷ்ணய்யர், என். வி. அய்யர், டாக்டர் எம். வி. ராமன், டி. ஆசார்யா, ஸ்ரீமதிகள் சாரதா ராமச்சந்திரன், வி. எஸ். ஜானகி சிவராம கிருஷ்ணன், பார்வதி வெங்குஸ்வாமி, ஓர் அபிமானி. ரூ. 3 நன்கொடை : ஸ்ரீமான்கள் ஆர். எம். ஐயர், எஸ். கே. வி. ராஜன் & பிரதர்ஸ், பி. துரைசன். ரூ. 2 நன்கொடை : ஸ்ரீமான்கள் ஜி. கே. ஸ்வாமி, ஏ. ராமகிருஷ்ணன், வி. ஜி. இறாகன், கே. வி. ரமணன், கே. ஆர். ஷெணுய், எம். எஸ். அனந்த கிருஷ்ணன், டி. என். பி. ஈஸ்வர, கே. எஸ். கிருஷ்ணன். ரூ. 1 நன்கொடை : ஸ்ரீமான்கள் ஜி. ராமசுப்ரமணியம், தமிழ்ப் பண்டிதர் சுந்தரேச அய்யர், டி. ஏ. ஸ்ரீனிவாஸன், ஆர். லிங்கம், கே. எஸ். வெங்குஸ்வாமி, ஜி. கிருஷ்ணமூர்த்தி, கே. எஸ். விஸ்வநாதன், கே. எஸ். சங்கரன், கே. ஆர். சுப்ரமணியம், என். கே. ராமய்யர், டி. என். மணி, கே. என். தேவேசன், வி. எஸ். ராஜன், எம். என். நடேசன், டி. என். கோபால கிருஷ்ணு, எம். எஸ். ராமஸ்வாமி அய்யர், பி. ஆர். ராமஸ்வாமி, டி. ஏ. கிருஷ்ணமூர்த்தி, பி. ஜி. சுப்ரமணியம், ஜே. ஜோசேப, கே. ஜகந்நாத், ஏ. எம். ஜா, கே. எஸ். கிருஷ்ணன், கே. டி. மீனுக்ஷிசுந்தரம், என். ராகவன், எஸ். பத்மனுபன், கே. ஏ. சிதம்பரம், கே. ஏ. சீதாராமன், வி. எஸ். மஹாதேவன், ஏ. வி. ஸ்ரீனிவாஸய்யர், ஆர். சீதாராமன், கே. எஸ். சீதாராமன், பி. எஸ். கிருஷ்ணன், என். சங்கர நாராயணன், ஆர். ராமநாதன், டி. ஓய். ரெகே, ஜி. எம். ஜா, பி. எஸ். ராமய்யா, எம். எஸ். ராமநாத், கே. என். கெங்காதரன், எம். ஏ. ஸ்ரீனிவாசன், கே. எஸ். குளந்து, எஸ். வி. கிருஷ்ணய்யர், வி. வி. சுப்ரமணியம், வி. துளசிதாசன், எஸ். ஏ. மாண்ட்யா, பி. வி. வி. சுப்ரமணியம், பி. ஆர். சேஷன், ஸ்ரீனிவாஸய்யர், பி. சுப்ரமணியம், எஸ். எஸ். சுந்தரம், சுப்பிரமணியம். ஒரு ரூபாய்க்கு உட்பட்ட நன்கொடை 47 அன்பர்கள் : ரூ. 20—4—0.

பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் சார்பாக 12-11-44 இதழில் கண்டிருந்தபடி ரூ. 25 நன்கொடை அளித்த அன்பர்களின் விவரம் :

ரூ. 5 : ஸ்ரீமான்கள் டி. ஆர். வி. நாராயணன், எஸ். கந்தசாமி, எஸ். வெங்குஸ்வாமி. ரூ. 3 : ஸ்ரீமான்கள், என். என். அய்யர். ஏ. வி. ராஜன். ரூ. 2 : ஸ்ரீ கே. ஏ. லிங்கம், ரூ. 1 : ஸ்ரீமான்கள்டி. வி. ஆதிகேசவலு, ஆர். பத்மனுபன்.

கூடூர்ப்பேட்டை 'கல்கி' ஏஜண்ட் ஸ்ரீ எம். வெங்கடராமன் மூலம் வரவு :

ரூ. 2 நன்கொடை : ஸ்ரீமான்கள் எம். வெங்கடராமன், என். ஸ்ரீனிவாச ஐயங்கார், டி. எஸ். ராமகிருஷ்ண ஐயர், பி. எஸ். சுப்ரமணிய ஐயர் ; ரூ. 1 நன்கொடை : ஸ்ரீமான்கள் காசி செட்டி வெங்கடகிருஷ்ணய்ய செட்டி, கே. சுப்ரமணிய முதலியார்.

திருநெல்வேலி 'கல்கி' ஏஜண்ட் மூலம் :

ரூ. 5 நன்கொடை : ஸ்ரீமான்கள் எம். ராமசாமி நாடார், டி. எஸ். அருணசலம் பிள்ளை, எஸ். கிருஷ்ணமூர்த்தி, இ. எஸ். சங்கரய்யர் ; ரூ. 2 நன்கொடை : ஸ்ரீமான்கள் வி. லக்ஷ்மி ராகவன், பி. சுப்ரமண்யம், எஸ். சுப்பையா பிள்ளை, எஸ். சிதம்பரம் பிள்ளை, ஸ்ரீமதி எஸ். புஷ்பவல்லி, செல்லையா பாண்டியன், டாக்டர் கே. ஆர். சுப்பையர் ; ரூ. 1 நன்கொடை : ஸ்ரீ காசி ஐயர்.

ஸெகந்தராபாத் 'கல்கி' ஏஜண்ட் மூலம் :

ரூ. 5 நன்கொடை : ஸ்ரீமான்கள் வி. ஆர். ராகவன், ஆர். கிருஷ்ணஸ்வாமி, வி. பால சுப்ரமணியம், ஸ்ரீமதி எஸ். ஆர். ரங்கசாமி ஐயங்கார், தேசாய் சூர்யநாராயணு ; ரூ. 3 நன்கொடை ஸ்ரீ வி. எஸ். கிருஷ்ணஸ்வாமி ; ரூ. 2 நன்கொடை : ஸ்ரீமான்கள் ஆர். சடகோபன், ஆர். எம். மூர்த்தி, வி. ஜே. ஸ்ரீனிவாசன், ஏ. பி. ஜம்புலிங்கம், என். ராஜமணி, என். ராமமூர்த்தி, மெஸர்ஸ் வாஸன் & கோ, ஓர் அபிமானி, என். எஸ். சீனிவாஸ ஐயர், பி. கோபால ஐயர், ஓர் அபிமானி ; ரூ. 1 நன்கொடை : ஸ்ரீமான்கள் பி. அப்பு, வி. ஏ. பத்மனுபன், எம். எஸ். கிருஷ்ணமூர்த்தி, வி. எம். வீரபத்திரன் செட்டியார், பி. எஸ். ஜகந்நாதன், வி. எஸ். மணி ஐயர்.

மதுரை "கல்கி" ஏஜண்டு மூலம் :

ரூ. 5 நன்கொடை : ஸ்ரீமான்கள் எம். சுப்ரமணிய ஐயர், ஆர். கிருஷ்ண மூர்த்தி ஐயர், ந. சுப்பிரமணியம், என். சிவராமன் ; ரூ. 3 நன்கொடை : ஸ்ரீமான்கள் என். ஆர். ராமகிருஷ்ண ஐயர், ஆர். ராஜாராம் ; ரூ. 2 நன்கொடை : ஸ்ரீமதி எம். எஸ். ரங்கநாயகி, ஸ்ரீமான்கள் ஆர். ராமநாத ஐயர், எஸ். எஸ். ராமய்யர், எச். வீரையா, பி. பாலசுப்பையா ; ரூ. 1 நன்கொடை : ஸ்ரீமான்கள் எம். ஆர். நாகராஜன், புதுமாடக் கோனர், கி. ராஜு செட்டியார், எஸ். ராஜாராவ், டி. அருணசலம் பிள்ளை, நா. ஆத்ரேயன், சப்பாக் கோனர், பூ. மு. சோ. வேலுச்சாமிக் கோனர், மாயாண்டி கோனர், ஈஸன் பிரஸ், ஸ்ரீமதி எம். கி. ஏ. ஜகதாம்பாள்.

அடக்க முடியவில்லை. அவள் முகத்தில் ஆகத்தையும், கோபமும் மறைந்து அதற்குப் பதில் பிரேமையும், வினயமும் பிரதிபலித்தன.

ரவிவர்மன் அவளை ஏறிட்டுப் பார்த்தான். "பிரிய கார்த்திகா! இன்று வாணியின் பாத கமலங்களில் சமர்ப்பித்துவிட்டு, உனக்குப் பரிசாக — என் அன்பின் அழியா அடையாளமாக — அளிப்பதற்கென்று, மூன்று மாத காலமாக அன்ன ஆகாரத்தையும், நித்திரையையும் கூடப் பொருட் படுத்தாமல், உன்னுடன்கூடச் சரியாகச் சம்பாஷிக்காமல், இந்தச் சித்திரத்தைப் பூர்த்தி செய்தேன். அதன் காரணமாக ஏற்பட்ட மனஸ்தாபத்தின் விளைவால் உன்னால் நிராகரிக்கப்பட்டு, இந்த ஊரைவிட்டே போகிறேன். ஆயினும், கார்த்திகா! உன் மாளிகையில் நுழைய என் சரீரத்துக்குத்தானே உரிமை இல்லை? என் உள்ளத்துக்கும், உள்ளத்தினுள்ளே உறைந்திருக்கும் உணர்வுக்கும் ஆக்கினையோ, கட்டுப்பாடோ கிடையாது. அவைகளைத் தடை செய்யவும் முடியாது. அவற்றின் பிரேம சிதியையே அவை சுற்றி அலையும். சரி, வீணில் உன் விலையிலாப் பொழுதை வியர்த்தப் படுத்துவானேன்? எனக்கு உத்தரவு அளித்து, என்னுடைய சிறு யாசகப் பொருளையும் அளித்துவிடு! நான் போகிறேன்" என்று கூறியபடியே அந்தச் சிப்பத்தை அவளிடம் கொடுத்தான்.

கைகள் நடுங்க, அதைப் பிரித்துப் பார்த்தாள் கார்த்திகாயினி. அவளுடைய உணர்ச்சி உச்ச நிலையை அடைந்தது. "அன்பனே! இவ்வளவு நாள் பழகியும் உன்னைச் சந்தேகித்தேனே! பாவி! எனக்கு மன்னிப்பும் உண்டா?" என்று அலறியபடி ரவிவர்மனின் பாதங்களில் விழுந்தாள்.

அந்தச் சித்திரத்தில் கார்த்திகாயினியின் உருவம்தான் வரையப் பட்டிருந்தது. ரவிவர்மனுடைய ஹிருதயத்தின் அடியில் எந்த சௌந்தர்ய வடிவம் — மாதுர்ய பிம்பம் — உயிரோவியம் — மறைந்திருந்ததோ, அதை அப்படியே வெளியில் கொண்டு வந்திருந்தான்.

தன் அடிகளில் பணிந்த பாவையைக் கைகொடுத்து எழுப்பினான் ரவிவர்மன். அவனுடைய கண்களிலிருந்து நீர்த் திவலைகள் அவளுடைய அழகிய சிரத்தில் விழுந்தது.

ஒன்றிடம் பதின்மடங்கு பிரியம் வைத்து, அது கிட்டாவிடில் நூறு மடங்கு விரோதம் பாராட்டிவிட்டு, அதற்குப் பிறகு ஆயிரம் வருந்துவது பெண்மனம் அல்லவா?

## டிராம் வண்டியில்



1. பிரயாணிகள் டிக்கட்டைக் கசக்குவதையும்,



2. வாயில் போட்டு ருசி பார்ப்பதையும்,



3. பேச்சுவாக்கில் ஒழித். தெறிவதையும்,



4. தடுக்க விரும்பினால், கைவிஷமத்துக்கு ஒன்றும், பிரயாணத்துக்கு ஒன்றுமாக, இரண்டு டிக்கட் கொடுக்கலாம் என்று நமது சித்திரக்காரர் அபிப்பிராயப்படுகிறார்.

— சாமா —

கண்முன் தோன்றிக்கொண்டே இருந்தது. இரவு முழுவதும் அவன் கண் மூடாமல் வேதனைப்பட்டுத் தவித்துக் கொண்டிருந்தான். காலை உதயமானவுடன் அரண்மனைக்குச் சென்று, தான் கார்த்திகாயினியைப் பார்க்க விரும்புவதாகச் சொல்லி அனுப்பினான். காவற்காரன் உள்ளே சென்று ரவியின் வரவைத் தெரிவித்தான். இரவு ரவியைப் போலவே மனக் குழப்பத்துடன் மன்றாடிவிட்டுக் கார்த்திகாவைகறையில் கண்ணயர்ந்திருந்தாள். மஹேசன் இரவு செடு சேரமாய் விட்டதென்னும் சாக்கைக் கொண்டு, மாளிகையிலேயே தங்கிவிட்டான். வாசற்காப்பவன் அவனிடம் ரவியின் வரவைத் தெரிவித்து, எஜமானியைப் பதில் கேட்டுக்கொண்டு வரும்படி சொன்னான். இதுதான் தருணம் என்று எண்ணிய மஹேசன், ரவியிடம் வந்து கார்த்திகாயினி மிகவும் கோபமாய் இருப்பதாகவும், அவன் ரவியைப் பார்க்க முடியாதென்று கண்டிப்பாய் உரைத்து விட்டதாகவும் தெரிவித்தான். ரவி வர்மனுக்காகத் தான் மிகவும் வருத்தப்படுபவன் போல் கடித்தான். ரவியும் தன்னுடைய ஊழ்வினையின் பயனை நொந்தவாறு தன் வீட்டிற்குச் சென்று தன் தனி அறையில் உட்கார்ந்திருக்கும் பொழுது, மானேஜர் கிருஷ்ணராவ் மரியாதையாக உள்ளே வந்து வணங்கினார்.

“ரவிவர்மரே! இதை இன்று காலை புலர்ந்ததும் உங்களிடம் சேர்ப்பிக்க வேண்டுமென்பது எம் எஜமானியின் உத்தரவு!” என்று சொல்லி அவனிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தார். அதை வாங்கிய ரவிவர்மனுக்கு ஆயிரம் எண்ணங்களால் மனம் குழம்பிற்று. உறையைக் கிழித்துக் கடிதத்தைப் பார்த்தான். அதில் ஜமீன் காரியாலயத்தின் முத்திரை இருந்தது. அக் கடிதம் கண்ட மூன்று நாளைக்குள், அவன் குடி இருக்கும் வீட்டைக் காலி செய்ய வேண்டும் என்றும், அதிலுள்ள ஸ்தாவர, ஜங்கம சொத்துக்கள் யாவும் ராமவர்மர் ரவியின் தகப்பனார் சமஸ்தானத்தில் பட்டிருக்கும் கடனுக்காக ஜப்தி செய்யப்பட்டிருப்பதால், அவைகளில் ஒன்றையும் தொடக் கூடாதென்பது கண்டிப்பான கட்டளை என்றும் வரையப்பட்டு, அடியில் மங்களபுரி சமஸ்தான ஜமீன் முத்திரையுடன் தேவி கார்த்திகாயினியின் கையெழுத்தும் காணப்பட்டது. அதை நிதானமாகப் படித்துவிட்டு ரவிவர்மன், “சரி, ராயரே! கோட்டையில் கண்டபடி உத்தரவு நிறைவேற்றப்படும் என்று தேவி அவர்களிடம் தெரிவித்து விடும்” என்றான்.

அவனுடைய முகக் குறிப்பையே உற்று நோக்கிக் கொண்டிருந்த கிருஷ்ணராவ் அதில் ஒன்றும் தெரிந்துகொள்ள முடியாமல் மலைத்தார். என்ன குற்றத்துக்காக இந்தத் தண்டனை என்றுகூடக் கேட்காமல் ஆக்கினைக்குட்பட்ட அந்த ஆண் சிங்கத்தின் குணத்தை வியந்தவாறு மாளிகையை நோக்கி நடந்தார்.

அதே தருணத்தில் கார்த்திகாயினி, “அவன் வரட்டும், வந்து என் காலில் விழட்டும். இதுதான் அவனுக்குச் சரியான தண்டனை! என்னை அவமதித்ததின் பயனை அனுபவிக்கும் பொழுதல்லவா தெரியும்?” என்று நினைத்துக்கொண்டு தன் அறையில் அடியுண்ட பெண் புலிபோல் மேலும், கீழும் உலாவிக் கொண்டிருந்தாள். என்ன! மனிதர்களின் அறியாமை?

★

வெள்ளிக்கிழமையும் விடிந்தது. சூரியன் உக்ரமும் தணிவாகவே இருந்தது. அன்றுதான் ஸரஸ்வதி பூஜை. ஊர் ஜனங்கள் யாவரும் அழைப்பிற் கிணங்க



ஜமீன் மாளிகையில் கூடிவிட்டார்கள். மெல்லென வீசும் மந்தமாருதத்தால் செடிகளிலிருந்து புஷ்பங்கள் கீழே உதிர்ந்து பூமியில் சொரிந்ததானது பிரம்ம தேவனும் தன்னுடைய சிருஷ்டித் தொழிலுக்கு ஆதாரமாகிய பூமிதேவியை மலர் கொண்டு அர்ச்சிப்பதுபோல் இருந்தது.

மாளிகை முழுவதும் ஒரே கோலாகலம். மகேசன் குறுக்கும் நெடுக்கும் ஓடி ஆடி மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்தான். அன்றைய தினம் சீமாட்டியின் நல்ல அபிப்பிராயத்துக்கு முழுவதும் பாத்திரனாகிவிட எண்ணினான்.

இவ்விதமான ஆடம்பரமும், கேளிக்கையும் நிறைந்த பண்டிகை எவளால் நடத்தப் பட்டதோ, அந்த ஆத்மாவின் மனம் மாத்திரம் நிம்மதி இழந்திருந்தது. வேண்டா வெறுப்பாக எல்லோரையும் வரவேற்று உபசரித்தாள்.

அந்த ஆனந்தோத்சவத்தின் ஆரவாரத்தையெல்லாம் அவள் மனம் விரும்பவில்லை. ஒரு வைர சைத்ரிகனின் அன்பு மொழிக்காக அவளுடைய மனம் ஏங்கித் தவித்தது. "நாம் இன்னொரு முறை பேசி யிருந்தால் அவனுடைய ஆதரவை அடைந்திருக்கக் கூடுமோ! சீ! என்ன மடத்தனம்? அவனுக்கு என்ன அவ்வளவு வஞ்சனை! என்னைவிட அவனுக்கு அந்தப் பத்மினி தானே உயர்வாகப் போய்விட்டாள்! இல்லா விட்டால் என் வார்த்தைகளை அலட்சியம் செய்வானா? ஒரு அற்பப் படத்தை எழுதுவதற்காக என்னைப் புறக்கணித்தானே!" இப்படி யெல்லாம் எண்ணி எண்ணி ஏங்கியவாறு நிலை கொள்ளாமல் தவித்தாள். குடிகளெல்லாம் வழக்கப்படி கலை தேவியின் பாதத்தில் காணிக்கை கொண்டுவந்து சமர்ப்பித்தனர். எவ்வளவோ விலை உயர்ந்த பொருள்களெல்லாம் வந்து குவிந்திருந்தன. வழக்கப்படி அதிகாலையில் — யாவருக்கும் முன்பாக — கை நிறைய அன்றலர்ந்த புஷ்பங்களைக் கலைவாணிக்குக் காணிக்கையாக வைத்து, திவ்விய முகத்துடன் காட்சியளிக்கும் அந்தப் பரிசுத்த ஆத்மா எங்கே? அவனையே எண்ணி அவள் மனம் அலைந்தது.

★

ரவிவர்மன் தான் குடியிருந்த வீட்டைக் காலி செய்துவிட்டு, தன் தாயையும், பத்மினியையும் வண்டியிலேற்றி அந்த ஊர்ச் சத்திரத்துக்கு அனுப்பிவிட்டு, தான் மாத்திரம் தனியனாய் அரண்மனை வாசலில் வந்து நின்றான். துணியால் சுற்றப்பட்ட ஒரு சிப்பம் அவன் கையில் இருந்தது. அங்கு நின்று கொண்டிருந்த கிருஷ்ணாவிடம் தான் ஒரு நிமிஷம் கார்த்திகாயினியைத் தனிமையில் சந்திக்க விரும்புவதாகச் சொன்னான். நாயருக்கு ரவியிடம் எப்பொழுதுமே உள்ள பிரியத்தால் அவனை இருக்கும்படி சொல்லி விட்டு, மாடியில் தன்னுடைய தனி அறையில் ஆழ்ந்த யோசனையில் இருந்த கார்த்திகாயினியிடம்போய் ரவியின் வரவைத் தெரிவித்தார். கற்பனா லோக சஞ்சாரத்திலிருந்து விழிப் படைந்த கார்த்திகாயினி தன்னைச் சமாளித்துக்கொண்டு, "அவனை இங்கு வரச் சொல்லும்!" என்றாள். அவள் மனம் படபடத்தது. "நாம் நினைத்தபடிதான் வந்திருக்கிறான்! நாம் மனம் இளகக் கூடாது!" என்று தனக்குள் கூறிக் கொண்டாள்.

உத்தரவின்படி உள்ளே நுழைந்த ரவி வர்மன், "தேவி! இன்று தங்களுடைய கட்டளையின்படி நான் இருந்த இடத்தைக் காலி செய்து விட்டேன். போகு முன் தங்களிடம் ஒரு சிறு யாசகம் பெற்றுப் போக வந்தேன்" என்றான்.

அவன் மொழிகள் கார்த்திகாயினியின் உள்ளத்தில் ஆயிரம் ஈட்டிகள் பாய்வது போல் இருந்தது. அவளுடைய கண்களில் இரண்டு நீர்த் துளிகள் மின்னின. தன்னை ஒருவாறாகச் சமாளித்துக் கொண்டு, "உனக்கு என்ன வேண்டுமோ, கேள். முடிந்தால் கொடுக்கப்படும்" என்று சற்று மிடுக்காகவே கூறினாள்.

உடனே ரவி வர்மன் அவளை நிமிர்ந்து நோக்கி, "கொட்டகையில் கண்டபடி என்னுடைய பொருள்களை யெல்லாம் நான் எடுத்துப் போகவில்லை — ஆனால், கார்த்திகாயினி தேவி! தங்களுடைய சம்மதத்தின் மேல் இந்த ஒரு வஸ்துவை மாத்திரம் நான் கொண்டு போக அனுமதி யளிக்க வேண்டும். இதை விட்டு என்னால் இருக்க முடியாது" என்றான்.

**கார்:**—ஏன்? அது என்ன, அவ்வளவு உயர்ந்ததா?

**ரவி:**—ஆமாம்; என் உயிருக்கு உயிரானதுதான்!

**கார்:**—அப்படிப் பிராண சமானமான பொருள் என்னவென்று அறிந்த பிறகு சொல்கிறேன்.

"சித்தப்படியே!" என்று உரைத்து ரவி வர்மன் தன்னிடமுள்ள சிப்பத்தை வெளியில் எடுக்கலானான்.

அவனையே பார்த்துக் கொண்டிருந்த கார்த்திகாயினியால் தன் உணர்ச்சிகளை



ரவி:—தனிமை என்ன கார்த்திகா! பத்மினி தான் இருக்கிறாளே!

ரவிவர்மன் சாதாரணமாகக் களங்கமற்ற மனத்துடன் சொன்ன இந்த வார்த்தைகள் ஏற்கெனவே மஹேசனுடைய பேச்சுக்களில் மயங்கி ரவியையும், பத்மினியையும் பற்றிச் சந்தேகப்பட்டுக் கொண்டிருந்த கார்த்திகாயினியின் உள்ளத்தில் எரிந்து கொண்டிருந்த அக்கினியில் நெய் வார்த்தது போலாயிற்று.

கார்த்திகா ஒரு கணம் தன் உணர் விழந்தாள். அவனுடைய உள்ளத்தை உணர்ந்து விட்டதாக எண்ணினாள். அந்த வார்த்தைகளின் தாத்பர்யங்களை அவள் மனம் ஆராய்ந்து அறிய முற்பட்டது. தன்னைச் சமாளித்துக் கொண்டு "சரி, ரவி! இனி உன் வீட்டுக்கு வரமாட்டேன். நீ உன் மனப் போக்கின்படி நடக்கலாம். என்னை அவமதித்ததின் பயனைச் சீக்கிரமே அறிவாய்!" என்று உரைத்து விட்டு மின்னலைப் போல் சென்றாள்.

பத்மினி எதிரில் ரவிக்குச் சிற்றுண்டிகளை ஏந்தியவாறு வந்துகொண் டிருந்தாள். அவளை எரித்து விடுபவள்போல் பார்த்து விட்டு வண்டியில் போய் ஏறிக்கொண்டாள் கார்த்திகாயினி.

அற்பக் காரணத்துக்காகக் கோபித்துக் கொண்டு செல்லும் அவ் வழகியைப் பார்த்தவாறிருந்தான் ரவிவர்மன். அவனுடைய தளரா மனமும் அன்பில் கரையப் பார்த்தது. அதை அடக்கிக் கொண்டு தன் வேலையைத் தொடங்கினான் சைத்ரிகன்.

கோபித்துக் கொண்டு சென்ற கார்த்திகாயினியின் மனம் ஒரு நிலையில் இல்லை. கட்டுக் கடங்காமல் தவித்தது. அதைப் பிறர் அறியா வண்ணம் சமாளிப்பது மிகவும் சிரமமாகி விட்டது. அன்றையப் பந்தயத்தில் மஹேசன்தான் வெற்றியடைந்தான். தேவி கார்த்திகாயினியின் கரத்தால் அவனுக்கு ஒரு பொற்பதக்கம் பரிசளிக்கப் பட்டது. அதைப் பெற்றுக் கொண்ட மஹேசன் மரியாதையாகத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

மஹேசனுடன் விநோதமாகப் பேசுவதில் தன்னுடைய மனக் கலக்கத்தைச் சற்று மறைத்துக் கொண்டு கார்த்திகாயினி தன்னைத் திருப்தி செய்து கொண்டாள். தன்னுடைய ஹிருதயக் கோவிலைச் சற்றுத் திறந்து பார்த்திருந்திருப்பாளே யாயின், அங்கு பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் தெய்வம் எதுவென உணர்ந்திருப்பாள்.

மேற் கூறிய சம்பவங்களால் மன வெறுப்புற்ற கார்த்திகாயினி, மஹேசனுடன் யோசித்துச் செய்த ஏற்பாடுதான் கதையின் ஆரம்பத்தில் சொல்லி இருக்கிறோம்.

★

**ம**றுநாள் காலை பொழுது புலர்ந்தது. ரவிவர்மன் தன் அறையில் உட்கார்ந்து ஆழ்ந்த யோசனையில் இருந்தான். முதல் நாள் நடந்த விஷயங்களைப் பற்றி அவன் மனம் சிந்தித்துக் கொண்டிருந்தது. தான் சாதாரணமாகச் சொன்னதைக் கார்த்திகாயினி விகல்பமாக நினைத்துக் கொண்டு கோபத்துடன் வெளியேறியது அவன் மனக்

காலச் சக்கரத்தின் அடியில் அகப்பட்டுக் கொண்டு ஆறு ஆண்டுகள் உருவில்லாமல் தேய்ந்து மறைந்தன. நம் கதை நிகழும் போது கார்த்திகாயினிக்கு வயது இருபது. நவ யௌவன சோபிதையாக, சௌந்தர்ய தேவதையின் சாயா ரூபம்போல் விளங்கிய கார்த்திகாயினிக்கு ஏற்ற குமாரனாகவே ரவி வர்மனும் திகழ்ந்தான்.

அவர்களைப் பிரித்துச் சோதிக்கவேபோல விதியானது மஹேசனையும், பத்மினியையும் கொண்டு வந்து சேர்த்தது.

★

பத்மினி, விமலா தேவியின் சகோதரன் மகள். விடுமுறைக்காக அத்தை வீட்டில் வந்து தங்கியிருந்த அவள், ரவியுடனும், கார்த்திகாவுடனும் சகஜமாகவே பழகி வந்தாள்.

மஹேசன் ஒரு டாக்டர். ராமவர்மர் நோயாகப் படுத்துவிடவே, அவருக்கு வைத்தியம் செய்ய வந்த மஹேசன், கொஞ்சம் கொஞ்சமாக அந்த மாளிகையில் சகஜமாகப் பழக ஆரம்பித்தான். ராமவர்மர் இறந்து விட்டார். பிறகும்கூட மஹேசனின் வருகை நிற்கவில்லை. ஆடம்பரப் பிரியனான அவன் கார்த்திகாயினியின் அளவற்ற செல்வத்தையும், அழகையும் கண்டு பேராசை கொண்டான். ஒருவேளை ரவி வர்மன் அவைகளை அடைந்து விடுவானோ வென்று பொருமினான். அதற்காக ரவி வர்மன்மேல் இல்லாத குற்றங்களை யெல்லாம் சுமத்தி, அவன்மேல் கார்த்திகாவுக்கு அருவருப்பு உண்டாக்க முயன்றான். ரவி வர்மன் பத்மினியை மணம் செய்து கொள்ளப் போவதாகவும், அவள் மேல்தான் ரவி விசுவாசமாக இருக்கிறான் என்றும் கார்த்திகாயினியின் மனதில் தைக்கும்படி எப்பொழுதும் ஏதாவது புகார் செய்து கொண்டிருந்தான். ஏற்கனவே சஞ்சல குணமுள்ள கார்த்திகாயினியின் மனதில் மஹேசனது மாயப் பேச்சுக்கள் பதிந்து ரவியின்மேல் சந்தேகமும் உண்டாயிற்று. ஆயினும், பெரும்பாலும் அவளுடைய மனம் ரவியின் மன உறுதியையும் நடத்தையையும் சந்தேகிக்க மறுத்தது.

இங்ஙனம் இருக்க, மங்களபுரியில் தசராக் கொண்டாட்டம் வெகு விமரிசையாக நடப்பது வழக்கம். அதற்காக ஊர் மத்தியில் அநேக விதமான வேடிக்கைகளும், விளையாட்டுக்களும் நடக்கும். கடைசி தினமாகிய ஸரஸ்வதி பூஜையன்று ஜமீன் மாளிகையில் உள்ள பெரிய கலைவாணியின் விக்கிரகத்துக்குப் பூஜையும் ஆடம்பரமாக இருக்கும். ஊர் ஜனங்களெல்லாம் அன்று தங்களுடைய சக்தியானுசாரம் வாணியின் பாதத்தில் காணிக்கை சமர்ப்பித்து வணங்குவார்கள். இளம் வித்வான்களும், கலைஞர்களும் அன்று தேவியின்முன் தங்களுடைய வித்தையை அரங்கேற்றுவதும் உண்டு. பிறகு எல்லோருக்கும் அரண்மனையிலேயே சம்பிரமமான விருந்து நடக்கும்.

அன்று விழா ஆரம்பித்து ஐந்தாம் நாள். ஊரிலுள்ள கனவான்களுக்கு முன் நீச்சல் பந்தயம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதற்காக நகர மத்தியில் ஒரு பெரிய செயற்கைத் தடாகம் வெட்டப்பட்டு அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. அன்றையப் பந்தயத்தில் தலைமை வகித்துப் பரிசளிக்க, தேவி கார்த்திகாயினியின் மேலான வரவு கோரப்பட்டிருந்தது.

மாலை மணி நாலுக்குக் கார்த்திகா தன்னை ஒப்பற்ற விதமாக அலங்கரித்துக் கொண்டாள். ரவிவர்மனின் வீட்டிற்குச் சென்றாள். ரவி தன்னுடைய அறையில் உட்கார்ந்து ஒரு சித்திரத்தைப் பூர்த்தி செய்வதில் முனைந்திருந்தான். இன்னும் மூன்று தினங்களில் அதை முடிக்க வேண்டுமென்னும் ஆவலில் அவன் ஊரில் நடக்கும் கேளிக்கைகளில் கலந்து கொள்ளவில்லை.

கார்த்திகாயினி ரவியின் அறைக்குள் வந்து, “ரவி! நீ இன்றைய விழாவுக்கு வரவில்லையா? நேரமாய் விட்டது, கிளம்பு!” என்றாள்.

**ரவி :**—நான் வருவதாக இல்லையே!

**கார் :**—ஏன் ?

**ரவி :**—இந்தச் சித்திரத்தை முடிக்க வேண்டிய வேலை இருக்கிறது.

**கார் :**—அது என்ன அவ்வளவு முக்கியமான சித்திரம்! என்னுடைய அழைப்பைக் கூட நிராகரிக்கும்படியானதா அது! நான் பார்க்கலாமோ ?

**ரவி :**—மன்னித்துக் கொள், கார்த்திகா! காலம் வரும்பொழுது உனக்குக் காட்டாமலா இருப்பேன்? இப்பொழுது மட்டும் முடியாது.

**கார் :**—அது போகட்டும்; என்னுடன் வர மாட்டாயா ?

**ரவி :**—முடிந்தால் வரமாட்டேனா? எனக்காக நீ கவலைப்படாதே. நான் வரவில்லை.

**கார் :**—உன்னைத் தனிமையில் விட்டு விட்டா போகச் சொல்கிறாய் ?

இருக்க வேண்டும். இனி நடந்துவிட்டதை எப்படி மாற்றுவது?" என்று குழம்பினுன்.

**ராயர்:**—என் அம்மா! அவர் உங்களுடைய ஆப்த நண்பரல்லவா? அதுவும் எத்தனை காலப் பழக்கம்! இன்றென்று அவர் என்ன குற்றம் செய்தார்? நேற்றுக்கூடத் தாங்கள் அவருடைய வீட்டுக்குச் சென்றதை நான்......

**கா:**—போதும், நிறுத்தும்! உம்மைக் கேட்கவில்லை. அவன் மட்டும் ரோஸமுள்ள ஆண் பிள்ளையாக இருப்பின் இங்கு வரமாட்டான். தப்பி வந்தாலுங்கூட, அவனை ஒருவரும் உபசரிக்கக் கூடாது. இது என் கட்டளை என்று எல்லா பணியாட்களுக்கும் அறிவித்து விடும். போய் மஹேசனைப் பார்த்து விட்டு வீட்டுக்குச் செல்லும். மஹேசன் கீழே என் வாசகசாலையில் இருக்கிறன். அவனிடம் சில விஷயங்கள் உமக்கு அறிவிக்கும்படி சொல்லி இருக்கிறேன். உத்தரவுப்படி கவனமாக நடந்து கொள்ளும்.

ராயர் விஷயம் புரியாதவராய் வாசகசாலையில் இருந்த மஹேசனைச் சந்திக்கச் சென்றார். இருவரும் ரொம்ப நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். கார்த்திகாயினி தேவியின் வாசக சாலையில் நுழைய நமக்கு உத்தரவு இல்லாததால், அவர்கள் அந்தரங்கமாகப் பேசியதை அறிய முடியவில்லை. வேலை நடக்கும்பொழுது பார்த்தால் புரிந்து விடுகிறது. ஆனால் நெடுநேரம் கழித்து வெளிவந்த ராயரின் முகத்தில் சொல்லொணுத சோகம் ததும்பிற்று. அவர் வாய் ஏதோ முணுமுணு வென்று பேசிக் கொண்டே இருக்க, தம் வீட்டை நோக்கி நடந்தார்.

★

**கா**ர்த்திகாயினியின் தகப்பனுர் வீர வர்மர் மங்களபுரியின் ஜமீன்தார். அபாரமான சொத்துக்களுடன், தன் ஒரே செல்வப் புதல்வியான கார்த்திகாயினியுடன் வாழ்ந்து வந்தார். கார்த்திகா பிறந்தவுடனேயே அவளுடைய தாய் இறந்து விட்டாள். தம் மகளின் க்ஷேமத்தையே பெரிதாக எண்ணி, வீரவர்மர் மறுமணம் செய்து கொள்ளாமல் தம் அருமை மகளை அன்புடன் வளர்ப்பதிலேயே பொழுதைப் போக்கி வந்தார்.

ராம வர்மர், வீரவர்மருடைய உயிர்த் தோழர். ஏழ்மை ஸ்திதியில் இருந்த அவர் வீரவர்மருடைய சொத்துக்களை மேல் பார்வை பார்த்துக் கொண்டு, அவருக்கு உதவியாக அவருடைய தோட்டத்திலேயே ஒரு சிறு வீட்டில் தம் குடும்பத்துடன் வசித்து வந்தார். அவருடைய ஒரே மகன் தான் ரவி வர்மன்.

ராம வர்மருடைய மனைவியான விமலா தேவி தன் நற்குணத்தால் பேதமில்லாமல் ரவியையும், கார்த்திகாவையும் தன் இரு கண்மணிகளைப் போல் நடத்தியதால் தாயற்ற குழந்தையான கார்த்திகாயினி அநேகமாக ராம வர்மருடைய வீட்டிலேயே வளர்ந்து வரலானுள்.

தம் அருமை மகளுக்குப் பதினைந்து வயதானபொழுது வீரவர்மர் மரணமடைந்தார். அவருடைய அந்திய காலத்தில் தம் சிநேகிதரும், காரியதரிசியுமான ராம வர்மரிடம் தம்முடைய சகல சொத்துக்களையும், அருந்தவப் புதல்வியையும் ஒப்புவித்து, கார்த்திகாயினிக்கு வயது வந்தபிறகு அவளிடம் ஜமீனை ஒப்புவிக்கும்படியும், அதுவரையில் அவளைத் தன் சொந்த மகளைப்போல் நடத்த வேண்டுமென்றும் பிரமாணம் வாங்கிக் கொண்டு, நிம்மதி அடைந்த உள்ளத்துடன் காலமானுர். தம் தோழனுக்கு அளித்த வாக்குத் தத்தத்தின்படியே ராமவர்மரும் கார்த்திகாயினியைத் தம் கண்மணியைப் போல் காத்து வரலானுர்.

குழந்தைகள் இருவரும் மிகவும் ஒற்றுமையுடனும், அன்புடனும் பழகி வந்தார்கள். ரவி வர்மன் சுபாவத்திலேயே சாந்த குணமும், பெருந் தன்மையும் உள்ளவன். அழகும், கம்பீரமும் அவன் முகத்தில் ஜொலித்தன. சகல கலா வல்லவனுக விளங்கினுன். ஆயினும், சித்திரக் கலையில் தனிப்பட்ட ஆர்வம் ஏற்பட்டு, அதை விருத்தி செய்வதிலேயே முனைந்திருப்பான். வேலையில் கவனமாக இருக்கும்பொழுது உலகமே புரண்டாலும் அவன் அறியான்.

கார்த்திகாயினியும் ஒப்பற்ற அழகி தான். கபடமற்ற குணமும், குழந்தை சுபாவமும் உள்ளவள். எடுத்ததற்கெல்லாம் முன்கோபம் வந்துவிடும். "பெண் புத்தி பின் புத்தி" என்னும் வாக்கியமே ஒரு உருவாக வந்தவள். இவளுடன் விளையாடும்பொழுதோ, பேசும்பொழுதோ ரவி வர்மன் இவள் சொல்வதையே ஆமோதித்தாக வேண்டும். இல்லாவிடில் அனர்த்தம் தான். ஆனுல் தானே சற்றுப் பொறுத்துத் தணிந்து போய் விடுவாள். ரவிவர்மனிடம் மாத்திரம் அவளால் வெகு நேரம் கோபித்துக் கொண்டிருக்க முடிவதில்லை.



# பெண் மனம்

## சசிதேவி



உலகப் பிரகாசனான சூரியதேவனின் அன்னையானவள் சந்தியா காலத்தில் அழகுடன் வீடு திரும்பும் தன் அருமை மகனுக்குத் திருஷ்டி தோஷம் விலக மஞ்சள் நீரைச் சுற்றிக் கொட்டியதுபோல், அந்தி வானம் மஞ்சளும் சிவப்பும் கலந்தொளிரும் விந்தையைப் பார்த்தபடி, தேவி கார்த்திகாயினி தன் மாளிகையின் மாடத்தில் நின்று கொண்டிருந்தாள். கார்த்திகாயினியின் அழகைக் கவிகளைப்போல் வர்ணிக்க நான் தயாராக இல்லை. சொல்லாவிட்டாலும் வாசகர்களுக்கு என்மேல் கோபம் வரலாம். ஆகையால், சுருங்கச் சொல்லின் உலக சௌந்தர்யங்களெல்லாம் ஒரு உருக் கொண்டதுபோல் அவள் நின்று கொண்டிருந்தாள். ஸாமுத்ரிகா லக்ஷணத்தை ஏற்படுத்திய புலவர் அவளுடைய அங்க அமைப்புக்களைப் பார்த்த பிறகு தான் தம்முடைய வர்ணனையை வகுத்திருக்கக் கூடும்.

அவளுடைய முகத்தில் தோன்றிய வியாகூலத்தின் ரேகைகள், வைசாக சுத்த பூர்ணிமா சந்திரனைப் பீடித்துள்ள சிறு களங்கத்தைப் போல் படர்ந்திருந்தது. அவளுடைய தோற்றத்தைப் பார்த்தால் சந்தியா தேவியின் சௌந்தர்ய ராசியில் அவ்வளவு ஈடுபட்டவளாகத் தோன்றவில்லை.

மாளிகையின் மணிக்கூண்டில் மணி ஏழடித்தது. அந்தச் சத்தத்தால் சிந்தனை லோகத்திலிருந்து விடுபட்ட கார்த்திகா திரும்பிப் பார்த்தாள். அவளுக்குப் பின்புறம் நின்றுகொண்டிருந்த மானேஜர் கிருஷ்ண ராவ் உடனே குனிந்து வணங்கினார்.

“என்ன வேண்டும், ராயரே? பண்டிகைக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்து முடித்து விட்டீரா?” என்று கேட்டாள் கார்த்திகா.

“இதோ, இந்த ஜாபிதாவிலுள்ள கனவான்களுக் கெல்லாம் அழைப்பு அனுப்பி இருக்கிறேன். மற்றக் காரியங்கள் யாவும் சித்தமாகி வருகிறது. இதைப் பார்த்து விட்டு இன்னும் யாரையாவது கூப்பிட வேண்டுமென்று உத்தரவிட்டால் சேர்த்துக் கொள்கிறேன்” என்றார்.

அந்தக் கடிதத்தை வாங்கிக் கார்த்திகாயினி படிக்க ஆரம்பித்தாள். படித்துக் கொண்டே வரும்போது, கடைசியில் 'திடீ' ரென்று கோபத்துடன், “ராவ்! உம்மை யார் ரவி வர்மனுக்குப் பத்திரிகை அனுப்பச் சொன்னது?” என்று வினவினாள்.

கிருஷ்ண ராவ் பயத்துடன், “வழக்கப்படி சென்ற வருஷக் குறிப்பைப் பார்த்து நான் தான் அனுப்பினேன். ரவி வர்மனுடைய தகப்பனார் ராமவர்மர் காலமாய் விட்டபடியாலும், அவர்களுடைய நெடுநாளையப் பழக்கத்தை உத்தேசித்தும் நான் தங்களைக் கேட்காமல் ரவிக்கு அனுப்பி விட்டேன். அதில் ஏதேனும் குற்றமுண்டோ?” என்று கேட்டார்.

அதற்குக் கார்த்திகாயினி, “உம் மேல் குற்றமில்லை. ரவி வர்மனுக்கு அனுப்ப வேண்டாமென்று நான் உம்மிடம் சொல்லி




# இரண்டு வார சேமிப்பு இயக்கம்

பார்த்த மாத்திரத்தில் தெரியும்படி சர்க்காரின்
பாதுகாப்புகளின் விவரங்கள்

## சிறுதொகை முதலீடு செய்பவர்களுக்கு

நேஷனல் சேவிங்ஸ்
ஸர்ட்டிபிகேட்டுகள்.

நீங்கள் 5000 ரூ. வரையிலும் வாங்கலாம். 3 வருஷங்களுக்குப் பிறகு ரொக்கமாக மாற்றலாம்.

12 வருஷங்களுக்குப் பிறகு ஒவ்வொரு ரூ. 10 க்கும் ரூ. 15 பெறுவீர்கள். இது 4½ சத வட்டிக்கு சமானமாகும்.

வருமான வரி கிடையாது.

சர்க்காரால் நியமிக்கப்பட்ட அதிகாரம் பெற்ற ஏஜண்டுகள், ஸேவிங்ஸ் பீரோ, தபாலாபீஸ்களில் கிடைக்கும்.

## கார்ப்பரேஷன், பாங்கி பணக்காரர்களுக்கு

விக்டரி லோன்.

இவ்வளவு தொகைக்குத்தான் வாங்கலாம் என்ற நிர்ணயம் கிடையாது.

1957ல் கொடுத்த தொகை திருப்பிக் கொடுக்கப்படும்.

3 சத வட்டி கொடுக்கிறது.

வேண்டுமானால் எப்பொழுதாயினும் விற்கலாம். இம்பீரியல் பாங்கியின் கிளைகளிலும், ரிசர்வ் பாங்க் ஆவ் இந்தியாவிலும், சர்க்கார் கஜானாவிலும் சப் டிரஷரிகளிலும் விண்ணப்பங்கள் பெற்றுக்கொள்ளப்படும்.

## இப்பொழுதுதான் மிச்சப்படுத்த ஏற்ற சமயம்

இந்திய சர்க்கார் நிதி இலாகா வெளியிட்டது.

TM AAA 1248

ஜலத்தை எடுத்துக் குடித்தான். குடித்து விட்டுக் கரை ஏறினதும் மயக்கம் உண்டாகிக் கீழே விழுந்தான்.

* * *

போனவன் திரும்பி வரவில்லையென்று தருமபுத்திரன் சகதேவனை அனுப்பினான். அவன் பொய்கையண்டை சேர்ந்ததும் அங்கே பூமியில் படுத்துக் கிடந்த சகோதரனைக் கண்டான். அவனை யாரோ கொன்று விட்டார்கள் என்று வைித்துக்கொண்டு தாகம் பொறுக்காமல் தண்ணீரண்டை சென்றான்.

அசரீரி முன் போலவே, "சகதேவா! இது என் பொய்கை. என்னுடைய கேள்விகளுக்கு விடை சொன்ன பிறகே தாகம் தீர்த்துக் கொள்ளலாம்" என்றது.

நகுலனைப் போலவே தாகம் மேலிட்ட சகதேவனும் அசரீரி எச்சரிக்கையைக் கவனியாமல் தண்ணீரைக் கண்டதும் குளத்தில் இறங்கி ஜலத்தை எடுத்துக் குடித்தான். அவனும் உடனே இறந்து கீழே விழுந்தான்.

* * *

சகதேவனும் திரும்பி வராததைக் கண்டு யுதிஷ்டிரன் அருச்சுனனைப் பார்த்து, "ஜலத்திற்காகப் போனவர்கள் வெகு நேரமாகியும் என்ன காரணமோ திரும்பி வரவில்லை. நீ போய் அவர்களுக்கு ஏதேனும் ஆபத்து நேரிட்டதா, பார். ஜலமும் கொண்டு வா!" என்று சொல்லி அனுப்பினான்.

அருச்சுனன் வேகமாகவே சென்றான். குளத்தண்டை தம்பிகள் இருவரும் செத்துக் கிடப்பதைப் பார்த்தான். திடுக்கிட்டு இதற்குக் காரணம் யாராக இருக்கலாம் என்று யோசித்துக் கொண்டே அவனும் தாகம் தீர்த்துக் கொள்ளப் பொய்கையில் இறங்கினான். அப்போது, "நான் கேட்கும் வினாக்களுக்கு விடை சொல்லிவிட்டுப் பிறகு தாகம் தீர்த்துக் கொள்வாய். இது என்னுடைய வசமுள்ள பொய்கை. மீறினாயானால் நீயும் தம்பிகளைப்போல் மாள்வாய்" என்றது அசரீரி.

அருச்சுனனுக்குக் கோபம் மேலிட்டது. "நீ யார்? கண்ணுக்கெதிரில் நின்று தடு. இதோ 'இந்தப் பாணங்களால் உன்னைக் கொல்வேன்!" என்று சொல்லிச் சத்தத்தைக் கொண்டே குறி பார்த்துப் பாணங்களை விட்டான். அசரீரி அம்புகளை அலட்சியம் செய்து, "உன்னுடைய பாணங்கள் என்னைத் தீண்டா. என்னுடைய கேள்விகளுக்கு விடை சொல்லிவிட்டுத் தாகம் தீர்த்துக் கொள். அவ்வாறு செய்யாமல் தண்ணீரைப் பருகினாயாகில் இறந்து போவாய்" என்றது.

செலுத்திய பாணங்கள் வீணானதைக் கண்டு அருச்சுனன் கோபத்தோடு மறுபடியும் யுத்தம் புரிவதற்கு ஆயத்தமானான். கடுமையான யுத்தத்தில் இறங்குவதற்குள் தாகம் தீர்த்துக் கொள்ளலாம் என்று பொய்கையில் இறங்கித் தண்ணீர் குடித்தான். குடிக்கவே அவனும் இறந்தான்.

* * *

"அப்பா பீமசேனா! சத்துருக்களைத் சம்ஹாரம் செய்பவனே! அருச்சுனனும் திரும்பவில்லை! நீ போய்ச் சகோதரர்கள் என்னவானார்கள் என்பதைப் பார்த்து விட்டுத் தண்ணீரும் கொண்டு வா. காலம் நமக்கு விரோதமாக இருக்கிறது. உனக்கு மங்களம்! எனக்குத் தாகம் பொறுக்க முடியவில்லை" என்றான் யுதிஷ்டிரன். பீமனும் வேகமாகப் போனான்.

பொய்கையண்டை மூன்று சகோதரர்களும் உயிர் துறந்தவர்களாக விழுந்து கிடப்பதைப் பார்த்துப் பீமனுக்குத் தாங்க முடியாத துக்கம் மேலிட்டது. "இது யக்ஷர்களுடைய வேலையாகத்தான் இருக்க வேண்டும். அவர்களைப் போர் புரிந்து வீழ்த்துவேன். அதற்குள் தண்ணீர் குடித்து இந்தத் தாகத்தைத் தீர்த்துக் கொள்வேன்" என்று எண்ணிக் குளத்தில் இறங்கப் போனான்.

"அப்பா, பீமசேனா! சாகசம் செய்யாதே! என் வினாக்களுக்குப் பதில் சொல்லி விட்டுத்தான் குளத்தில் இறங்க வேண்டும். நான் சொன்னதை மீறித் தண்ணீர் குடித்தாயானால் சாவாய்!" என்றது அசரீரி.

"நீ யாரடா என்னைத் தடுக்க?" என்று சொல்லிக் கொண்டே பீமன் நச்சுத் தண்ணீரைக் குடித்து விட்டுச் சகோதரர்களைப்போல் தானும் கீழே விழுந்தான்.

* * *

"இது நாளும் நடவாத விஷயமாக இருக்கிறதே? நெடுநேரமாகியும் போன சகோதரர்கள் யாரும் திரும்பாமலிருப்பதற்கு என்ன காரணம்? ஏதேனும் சாபத்தை அடைந்து விட்டார்களோ? ஜலத்தைக் காணாமல் காட்டில் திரிந்துகொண்டிருக்கிறார்களோ? நானே போய்த்தான் பார்க்க வேண்டும்" என்பதாக யுதிஷ்டிரன் நிச்சயித்து வனத்திற்குள் சகோதரர்களைத் தேடிக் கொண்டு போனான்.

# நச்சுப் பொய்கை

## சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

**பா**ண்டவர்களுடைய பன்னிரண்டு வருஷ வனவாசம் முடியும் காலம் நெருங்கிற்று.

ஒரு நாள் வனத்தில் வசித்து வந்த ஒரு ஏழைப் பிராமணனுடைய அரணிக் கட்டையின்மேல் ஒரு காட்டு மான் உடலை உராய்ந்து கொண்டு திரும்பிச் செல்லும்போது அரணிக்கட்டை அதன் கொம்பில் மாட்டிக் கொண்டது. அரணி என்பது தீக்குச்சியில்லாத அந்த நாட்களில் நெருப்பு உண்டாக்குவதற்காகத் தனி ஆசிரமங்களில் வசிப்பவர்கள் வைத்துக் கொண்டிருந்த கடைக்கோலும் கீழ்க் கட்டையுமான ஒரு எந்திரம்.

மான் மிரண்டு வேகமாக ஓடிற்று. பிராமணன், "ஐயோ, என் அரணியை மான் தூக்கிக்கொண்டு போய்விட்டதே. அக்னி ஹோத்திரத்திற்கு நான் என்ன செய்வேன்!" என்று கத்திக்கொண்டு பாண்டவர்களிடம் ஓடிப்போய் முறையிட்டான்.

பாண்டவர்கள், "இதற்காக ஏன் கவலைப்படுகிறீர்?" என்று மானைப் பிடிக்க ஓடினார்கள். அரணியைத் தூக்கிக் கொண்டு போன மான் உண்மையில் மான் அல்ல; மாய மான். அது துள்ளிக் குதித்து வேகமாகச் சென்று பாண்டவர்களைக் காட்டில் வெகு தூரம் இட்டுக்கொண்டு போய் மறைந்து விட்டது.

* * *

**பா**ண்டவர்கள் மிக்க களைப் படைந்து ஒரு ஆலமரத்தடியில் உட்கார்ந்தார்கள். எல்லாரும் பெருந் தாகத்தால் வருந்தினார்கள். நகுலன் யுதிஷ்டிரனைப் பார்த்து, "அந்தப் பிராமணனுக்கு நாம் சொன்ன அற்ப காரியத்தைக் கூட நம்மால் செய்து முடிக்க இயலாமல் போய்விட்டதே! நாம் என்ன தாழ்ச்சியை அடைந்து விட்டோம்!" என்றான்.

இவ்வாறு நகுலன் வருத்தப்பட்ட போது பீமன், "திரௌபதியைச் சபைக்கு இழுத்து வந்தார்களே, அப்போதே நான் அந்த நீசர்களைக் கொன்றிருக்க வேண்டும். அது செய்யாதபடியால் அல்லவா நாம் இந்தச் சங்கடங்களை அடைந்தோம்?" என்று சொல்லி அருச்சுனனை வருத்தத்தோடு பார்த்தான்.

அருச்சுனனும், "ஆம்! அந்தச் சூத புத்திரன் சொன்ன கடுஞ் சொற்களைக் கேட்ட பின்னும் நான் சும்மா நின்றேன். அதனால் இந்த நிலைமையில் இருக்கிறோம்" என்றான்.

எல்லாரும் பொறுமையும் தைரியமும் இழந்திருப்பதைக் கண்ட யுதிஷ்டிரனுக்கு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை. பொறுக்கமுடியாத தாகம் வாட்டிற்று. நகுலனைப் பார்த்து, "தம்பி! அந்த மரத்தின்மேல் ஏறிச் சமீபத்தில் எங்கேயாவது ஜலம் இருக்கிற குளமாவது, ஆறாவது தென்படுகிறதா, பார்!" என்றான்.

நகுலன் மரத்தின்மீது ஏறிப் பார்த்து விட்டு இறங்கி வந்து, "கொஞ்சம் தூரத்தில் ஜலத்தை அடுத்து வளரும் செடி வகைகளும் சாரஸப் பட்சிகளும் தென்படுகின்றன. சாரஸங்கள் இருக்கும் இடத்தில் கட்டாயம் ஜலம் இருக்கும்" என்றான்.

"போய்ப் பார்த்து அவ்விடத்தில் ஜலம் கிடைத்தால் சீக்கிரம் எடுத்துக் கொண்டு வா" என்று யுதிஷ்டிரன் சொல்ல நகுலன் விரைவாகப் போனான்.

போன இடத்தில் எதிர்பார்த்தபடி ஒரு பொய்கையைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தான். தன் தாகத்தையும் தீர்த்துக்கொண்டு அம்புத் தூணியிலும் தண்ணீர் நிரப்பிக் கொள்ளலாம் என்று நகுலன் பொய்கையில் இறங்கினான். நிர்மலமான ஜலத்தில் கையைத் தோய்த்ததும் ஒரு அசரீரிப் பேச்சு ஆகாயத்தில் உண்டாயிற்று.

"சாகசம் செய்யாதே! இது என் வசமுள்ள குளம். மாத்ரீ புத்திரனே! என் கேள்விகளுக்கு விடை கூறிவிட்டுப் பிறகு தண்ணீரைக் குடி!" என்றது.

நகுலன் திடுக்கிட்டான். ஆனால் தாகத்தின் வேகத்தினால் அதைக் கவனியாமல்

யாத்திரை கிளம்பியவர்களைக் கடவுளே பார்த்து இந்த ஊரில் கொண்டு விட்டிருக்கிறார். நாங்கள் இங்கேயே இருப்பதுதான் இறைவனுடைய சித்தம் என்று தோன்றுகிறது!"

"அப்பா! நாகநந்தி என்ன ஆகியிருப்பார்?" என்று சிவகாமி கேட்டாள்.

"ஐயோ! பாவம்! என்ன ஆனாரோ, தெரியவில்லை. இன்னொரு வயோதிக பிக்ஷுவின் கதியும் என்ன ஆயிற்றோ, தெரியவில்லை!"

அப்போது மாமல்லர் தன்னுடன் வந்த சைன்யத்தின் கதி என்ன ஆயிற்று என்று நினைத்தார். குண்டோதரன், படகு சம்பாதித்துக் கொண்டு வருவதாகச் சொல்லி, காலையிலேயே போனவன், இன்னும் ஏன் திரும்பி வரவில்லை?......

சற்று நேரத்துக்கெல்லாம் கீழ் வானத்தில் சந்திரன் உதயமானான். அவனுடைய கிரணங்களினால் வெண்ணிறம் பெற்ற வெள்ளப் பரப்பானது தேவர்கள் அமுதத்திற்காகக் கடைந்த பாற்கடலைப் போல் ஜொலித்தது. வெள்ளத்திலிருந்து சந்திரன் கிளம்பியது, அந்தப் பாற்கடலிலிருந்து அமுதம் நிறைந்த தங்கக் கலசம் கிளம்புவதுபோலிருந்தது.

சிறிது நேரம் சந்திரோதயத்தின் அழகைப் பற்றியே அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். பிறகு, ஆயனருக்கு இருப்புக் கொள்ளவில்லை. "நிலா வெளிச்சத்தில் ஒரு தடவை இந்தப் பாறைகளைச் சுற்றிப் பார்த்துவிட்டு வருகிறேன்!" என்று சொல்லிவிட்டுப் போய் விட்டார்.

* * *

**மா**மல்லரும் சிவகாமியும் வெகு நேரம் மௌனமாய் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுடைய இரு கைகள் மட்டும் ஒன்று சேர்ந்து அந்தரங்கம் பேசிக் கொண்டிருந்தன.

அவர்களுக்கு வெளியிலே மகிழம் பூவின் நறுமணம் நிறைந்து மூச்சுத் திணறும்படி செய்தது.

அவர்களுடைய உள்ளங்களிலே இன்பம் ததும்பி மூச்சுத் திணறும்படி செய்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவர்களுக்குக் கீழேயிருந்த பூமி இலேசாக நழுவிச் சென்றது!

அவர்களுடைய தலைக்கு மேலே வானமானது, சந்திரமண்டலம் நட்சத்திரங்களுடன், திடீரென்று மறைந்து விட்டது!

எங்கேயோ, எங்கேயோ, எங்கேயோ, அவர்கள் எல்லையில்லாத இன்ப வெள்ளத்தில் மிதந்து மிதந்து மிதந்து போய்க் கொண்டிருந்தார்கள். அப்படி அவர்கள் மாயாலோகத்தில் செய்த யாத்திரை ஒரு கண நேரமா அல்லது பல யுகங்களா என்பது தெரியாதபடி காலாதீத நிலையை அவர்கள் அடைந்து, மேலே, இன்னும் மேலே, அதற்கும் மேலே போய்க் கொண்டிருந்தார்கள்.

திடீரென்று, அமுதமளாவிய குளிர் இளங்காற்று வீசி, மகிழ மரத்தின் கிளைகளில் சலசலப்பை உண்டு பண்ணியது.

அந்தக் கிளைகளிலிருந்து மகிழம் பூக்கள் பொல பொலவென்று அவர்களுடைய தலைமேல் உதிர்ந்தன.

இருவரும் தடாலென்று பூலோகத்துக்கு வந்து சேர்ந்தார்கள். மண்டபப் பட்டுக் கிராமத்துப் பாறையின் மேல் மகிழ மரத்தினடியில் தாங்கள் உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள்.

"சிவகாமி! என்ன சிந்தித்துக் கொண்டிருந்தாய்?" என்று மாமல்லர் கேட்டபோது, வெகு வெகு வெகு தூரத்திலிருந்து அவர் பேசுவது போலிருந்தது.

"பிரபு! கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள். விழுந்து விடுவேன் போலிருக்கிறது!" என்றாள் சிவகாமி.

"ஏன், சிவகாமி, உன் உடம்பு நடுங்குகிறது? குளிர் காற்றினாலா?"

"இல்லை, பிரபு! குளிர் இல்லை. என் உடம்பு கொதிக்கிறதைப் பாருங்கள்!"

"பின் ஏன் நடுங்குகிறாய்?"

"ஏதோ பயமாயிருக்கிறது; நான் உயிரோடுதானிருக்கிறேனா?" என்று சிவகாமி ஐயமும் வியப்பும் கலந்த குரலில் கேட்டாள்.

"இது என்ன கேள்வி? உயிரோடு இல்லாவிட்டால் எப்படி என்னுடன் பேச முடியும்?"

"பிரபு! சற்று முன்னால், எனக்கு எங்கேயோ வான மார்க்கத்தில் போவதுபோல் தோன்றியது. சத்த

மில்லாத ஒரு தெய்விக சங்கீதம் எங்கிருந்தோ வந்து கொண்டிருந்தது. அதன் தாளத்துக் கிணங்க என் ஆத்மா நடனமாடிக் கொண்டு மேலுலகம் சென்றது ... அதெல்லாம் பிரமைதானே? நிஜமாக நான் இறந்து விடவில்லையே?"

"ஆம்; சிவகாமி! ஒரு விதத்தில் நாம் இருவருமே இறந்து விட்டோம்; ஆனால் மறுபடியும் பிறந்திருக்கிறோம். இருவருக்கும் இது புனர்ஜன்மந்தான். மூன்று நாளைக்கு முன்னால் நாம் இந்தக் கிராமத்துக்கு வந்தபோது தனித் தனி உயிருடனும் உள்ளத்துடனும் இருந்தோம். இன்று அந்தச் சிவகாமி இல்லை நீ; நானும் அந்த நரசிம்ம வர்மன் இல்லை. என் உயிரிலும் உள்ளத்திலும் நீ கலந்திருக்கிறாய். அப்படியே உன் உயிரிலும் உள்ளத்திலும் நான் கலந்து போயிருக்கிறேன். ஆகையால் நாம் இருவரும் மரணமடைந்து மறு பிறப்பும் அடைந்து விட்டோம். எல்லாம் மூன்றே நாளில்!..." என்றார் மாமல்லர்.

"நிஜமாக மூன்று நாள்தானா? என்னால் நம்ப முடியவில்லை. எத்தனையோ நீண்ட காலம் மாதிரி தோன்றுகிறது!"

"அதுவும் உண்மைதான். இந்த மூன்று நாள் வெறும் மூன்று நாள் அல்ல. இதற்கு முன் எத்தனையோ ஜன்மங்களில் நாம் ஒருவரையொருவர் பார்த்திருக்கிறோம்; காதலித்திருக்கிறோம்; பிரிந்திருக்கிறோம்; சேர்ந்திருக்கிறோம்; அவ்வளவு அனுபவங்களையும் இந்த மூன்று தினங்களில் திரும்ப அனுபவித்தோம்."

"இதோடு எல்லாம் முடிந்து போய் விட்டதா, பிரபு?"

"அது எப்படி முடிந்து விடும்? பல ஜன்மங்களில் தொடர்ந்து வந்த உறவு இந்த ஜன்மத்தோடு மட்டும் எப்படி முடியும்?"

"வருகிற ஜன்மங்களைப் பற்றி நான் கேட்கவில்லை. இந்த ஜன்மத்தைப் பற்றித்தான் கேட்கிறேன். எப்போதும் இப்படியே இருக்குமா?"

"எது இப்படி இருக்குமா என்று கேட்கிறாய்?"

"உங்களுடைய அன்பைத்தான்."

மாமல்லர் தமக்கு அருகில் பாறையில் உதிர்ந்து கிடந்த மகிழம் பூக்களைத் திரட்டிச் சிவகாமியின் கையில் வைத்தார்.

"சிவகாமி! என்னுடைய அன்பு மல்லிகை—முல்லை மலர்களைப் போன்றது அன்று. இன்றைக்கு மணத்தை வாரி வீசிவிட்டு நாளைக்கு வாடி வதங்கி மணமிழந்து காய்ந்து போவதன்று. என் அன்பு மகிழம் பூவை ஒத்தது; நாளாக ஆக அதன் மணம் அதிகமாகும். வாடினாலும் காய்ந்து உலர்ந்தாலும் அதன் மணம் குன்றாது. வளர்ந்து கொண்டு தானிருக்கும்.........அன்றைக்கு, தாமரைக் குளக்கரையில் என்னிடம் வாக்குறுதி கேட்டாயே, ஞாபகம் இருக்கிறதா, சிவகாமி!"

"இருக்கிறது!"

"அந்த வாக்குறுதியை இப்போதும் கோருகிறாயா?"

"வேண்டாம், பிரபு! தங்கள் மனதை இவ்வளவு தூரம் தெரிந்து கொண்ட பிறகு நான் வாக்குறுதி கேட்டேனானால், என்னைப் போன்ற அசடு உலகில் வேறு யாரும் இல்லை. வாக்குறுதி வேண்டாம், பிரபு! மன்னிப்புத்தான் வேண்டும்!"

"எதற்கு மன்னிப்பு?"

"தங்களைப் பற்றிச் சந்தேகம் கொண்டதற்குத்தான். தங்களைப் பற்றி ஒரு துஷ்ட நாகம் கூறிய விஷங் கலந்த மொழிகளை நம்பியதற்காகத்தான்!" என்றாள் சிவகாமி.

அப்போது இலேசாகச் சரசர வென்ற சத்தம் சமீபத்தில் கேட்கவே, சிவகாமி மிரண்டு பார்த்தாள். மரக்கிளைகளின் நிழலும் நிலா வெளிச்சமும் மாறி மாறித் தரையில் படிந்திருந்த இடத்தில் அவர்களுக்குச் சமீபத்தில் ஒரு பாம்பு நெளிந்து நெளிந்து போய்க் கொண்டிருந்தது.

"ஐயோ! பாம்பு!" என்று சிவகாமி அலறிக்கொண்டு எழுந்தாள்.

மாமல்லர் சட்டென்று எழுந்து, சிவகாமியை ஆதரவுடன் தன்னோடு சேர்த்து அணைத்துக் கொண்டார். "பயப்படாதே, சிவகாமி! நானிருக்கும்போது என்ன பயம்?" என்றார்.

ஆனால், இன்று அந்தப் பாடலுக்கு அபிநயம் காஞ்சியில் நாவுக்கரசர் பெருமான் சந்நிதியில் அமைந்தது போல் அவ்வளவு உணர்ச்சியுடன் அமைய வில்லை யென்று மூன்று பேருக்கு மட்டும் தெரிந்திருந்தது. அந்த மூவர் ஆயனர், மாமல்லர், சிவகாமி ஆகியவர்கள் தான்.

சிவகாமி இன்றைக்கு அபிநயத்தின் முடிவில் மூர்ச்சை யடைந்து பூமியில் விழவும் இல்லை!

அத்தியாயம் 37

## புதிய பிறப்பு

மண்டபப் பட்டுக் கிராமத்துக்கு வந்து சேர்ந்த மூன்றும் நாள் சாயங் காலம் ஆயனர், சிவகாமி, மாமல்லர் ஆகிய மூவரும் கிராமத்துக்கு வெளியே உலாவி வரக் கிளம்பி னார்கள். பாறையில் படகு மோதி அவர்கள் நீரில் மூழ்கிய இடத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

வெள்ளம் இன்றைக்கு ரொம்பவும் வடிந்து போயிருந்தது. அன்று தண்ணீரில் மூழ்கியிருந்த இடங்களில் இன்று நீர் வடிந்து பாறைகள் நன் ருய்த் தெரிந்தன. கரையோரத்து மரங்கள் அன்று பாதி அளவு வெள் ளத்தில் மூழ்கியிருந்தன. இன்றைக்கு அதே மரங்களின் வேரின் மீது தண்ணீர் சலசல வென்று அரித் தோடிக் கொண்டிருந்தது. பாறைப் பிரதேசமாதலால் வெள்ளத்திற்குப் பிறகு இடங்கள் வெகு சுத்தமா யிருந்தன.

அந்தப் பாறைகளைச் சுற்றிச் சுற்றி வந்து பார்ப்பதில் ஆயனர் அடங்காத ஆர்வம் கொண்டவரா யிருந்தார். இந்திந்தப் பாறையை இன்னின்ன மாதிரி கோயிலாக அமைக்கலாம், இன்னின்ன சிற்ப வடிவங்களாகச் செய்யலாம் என்று அவர் உள்ளம் கற்பனை செய்துகொண்டிருந்தது.

சிவகாமியும் மாமல்லருமோ, மகிழ மரத்தடியில் பாறையின் மீது அருகருகே உட்கார்ந்து மௌனம் சாதிப் பதில் அடங்காத பிரியம் கொண்டவர் களாகத் தோன்றினார்கள்.

பகலும் இரவும் மயங்கிக் கலந்திருந்த அந்தி நேரத்தில் ஆயனர் அரை மனதாக, "போகலாமா, சிவகாமி!" என்று கேட்டார்.

"அப்பா! இன்றைக்கு இருட்டி இரண்டு நாழிகைக்குப் பிறகு சந்தி ரோதயம் ஆகுமல்லவா? அதைப் பார்த்து விட்டுப் போகலாமே?" என்றாள் சிவகாமி.

"அதற்கென்ன, அப்படியே செய்ய லாம்!" என்று கூறி ஆயனர் உட் கார்ந்தார்.

சற்று நேரம் மௌனம் குடிகொண் டிருந்தது.

"இந்த ஊரை விட்டுப் போக எனக்கு மனம் வராதென்று தோன்று கிறது!" என்றார் ஆயனர்.

"இந்த ஊர் பாக்கியம் செய்த ஊர். கிராம வாசிகள் சொன்னார்களே, அது உண்மைதான்!" என்றார் மாமல்லர்.

"ஏன், அப்பா! அவ்வளவு தூரம் இந்த ஊர் உங்களுக்குப் பிடித்து விட்டதின் காரணம் என்ன?" என்று சிவகாமி கேட்டாள்.

"இந்தப் பாறைகளைப் பார்க்கும் போது எனக்கு ஆசையா யிருக்கிறது. திவ்யமான கோயில்கள் அமைப்ப தற்குக் கை ஊறுகிறது."

"இன்னும் எத்தனையோ ஊர் களிலே தான் பாறைகள் இருக்கின் றன!" என்றாள் சிவகாமி.

"இந்தக் கிராம வாசிகள் மிகவும் நல்லவர்கள்; அதோடு ரஸிகர்கள். நேற்று உன்னுடைய நடனத்தைப் பார்த்து எவ்வளவு ஆனந்தப் பட்டார்கள்!"

"ஐயா! ஜாக்கிரதை! காஞ்சி யிலே ரஸிகர்கள் இல்லை யென்று சொல்கிறீர்களா, என்ன?" என்று மாமல்லர் பொய்க் கோபத்துடன் கேட்டார்.

"அப்படிச் சொல்வேனா? மகேந்திர பல்லவரும் அவருடைய திருக்குமார ரும் இருக்கும் காஞ்சியில் ரஸிகர்கள் இல்லாமற் போய் விடுவார்களா?— அந்த எண்ணத்துடன் நான் சொல்ல வில்லை, எங்கேயோ போகலாமென்று

யுடனே, வித விதமான இதயப் பாடுகளை அற்புதமாக வெளிக் கொண்டு வந்து அபிநயம் பிடித்தாள்.

பாட்டும் அபிநயமும் முடியும் தறுவாயில் சபையிலே பலருக்கு ஆவேசமே வந்து விட்டது!

ஒரு வயது சென்ற கிழவர் எழுந்து நின்று "நடராஜா, நடராஜா! நர்த்தன சுந்தர நடராஜா!" என்று பாடிக் கொண்டே ஒரு காலைத் தூக்கிய வண்ணம் சபையிலேயே நடனமாடத் தொடங்கி விட்டார்.

இம்மாதிரி உணர்ச்சி வாய்ந்த அபிநயத்தை இதுவரையில் யாரும் பார்த்ததில்லை, இனிமேலும் பார்க்கப் போவதில்லை என்று சபையோர் ஒருவருக்கொருவர் கூறி மகிழ்ந்தார்கள்.



யூறு நேரிடக் கூடாதென்ற எண்ணத்தினால் தலைகுனிந்து கொண்டார்.

மேற்கூறிய பாடலும் அபிநயமும் சபையோருக்கு எல்லையற்ற குதூகலத்தை அளித்துப் பலமுறை 'ஆஹா' காரத்தை வருவித்தது. ஆனாலும் சபையோர் திருப்தியடைந்தவர்களாகக் காணவில்லை. அவர்களில் ஒருவர் துணிந்து எழுந்து அரங்கமேடைக்குச் சென்று ஆயனர் காதோடு ஏதோ சொன்னார். அது சிவகாமியின் செவியிலும் விழுந்தது. சிவகாமி சிறிது தயக்கத்துடனேயே,

"முன்னை அவனுடைய நாமம்
கேட்டாள்!"

என்று பாடிக்கொண்டு அபிநயம் ஆரம்பித்தாள். எவ்வளவோ திறமை





# சிவகாமியின் சபதம்

## அத்தியாயம் 36

## "கள்வரோ நீர்?"

மறுநாள் மாலை நேரத்தில் மண்டபப்பட்டுக் கிராமத்துச் சிவன் கோயில் கண் கொள்ளாக் காட்சி அளித்துக் கொண்டிருந்தது. கோயிலின் முன் கோபுர வாசலை நீண்ட வாழைத் தார்களையுடைய பசுமையான வாழை மரங்களும், மகர தோரணங்களும், திரைச் சீலைகளும் அலங்கரித்தன.

உள்ளே அர்த்த மண்டபத்தையும் வெளிக் கோபுரத்தையும் சேர்த்துப் பிராகாரத்தில் விஸ்தாரமான பந்தல் போட்டிருந்தார்கள். பந்தல் முனைகளில் வரிசைவரிசையாகத் தந்தவர்ண முள்ள இளந் தென்னங் குருத்துத் தோரணங்களும், அவற்றின் இடையிடையே செந்தாமரை மொட்டுக்களும் தொங்கிக் கொண்டிருந்தன.

அந்த நாளில் தமிழ்நாட்டில் நீர்வளமுள்ள ஒவ்வொரு கிராமத்திலும் தாமரைக் குளம் உண்டு. குளத்திலே தண்ணீர் இருப்பதே தெரியாத வண்ணம் அப்படித் தாமரை இலைகளும் மலர்களும் மொட்டுக்களும் நிறைந்திருக்கும். எனவே, கோயில் விக்கிரகங்களுக்கு வேறு அபூர்வ புஷ்பங்களைச் சாத்திவிட்டுத் தாமரை மொட்டுக்களையும் மலர்களையும் கோயிலின் அலங்காரத்துக்கு உபயோகப்படுத்துவார்கள்.

இவ்விதம் அமோகமாக அலங்கரிக்கப் பட்டிருந்த கோயிலில் அஸ்தமிப்பதற்கு முன்னால் ஊர் ஜனங்கள் எல்லாரும் வந்து கூடி விட்டார்கள். ஸ்திரீகள், குழந்தைகள் ஒருவரும் மிச்சமில்லாமல் வந்து அவரவர்களும் போட்டியிட்டு முன்னால் இடம் பிடித்துக்கொண்டு உட்கார்ந்தார்கள்.

சூரியன் அஸ்தமித்ததும் நூற்றுக் கணக்கான அகல் விளக்குகள் ஏற்றப்பட்டு ஆலயம் ஜகஜ்ஜோதியாய் விளங்கிற்று. அதே சமயத்தில், சிவகாமி தேவியின் திவ்ய நடனத்தைப் பார்ப்பதற்காகவே விஜயம் செய்கிறவனைப் போல் கீழ் வானத்தில் பூரண சந்திரனும் உதயமானான்.

ஆயனரும் சிவகாமியும் கோபுர வாசலுக்குள் நுழைந்ததும் கூட்டத்தில் ஏக கலகலப்பு உண்டாயிற்று.

பந்தலுக்குத் தென் புறத்தில் அமைக்கப் பட்டிருந்த அலங்கார அரங்க மேடையிலே வந்து சிவகாமி நின்றதும் கூட்டத்தில் ஆழ்ந்த நிச்சப்தம் ஏற்பட்டது. ஸ்திரீகளும் பேச்சை நிறுத்தினார்கள். அழுத குழந்தைகளும் வாய் மூடின.

முதல் நாள் வெள்ளத்திலே அடிபட்டு வந்து, அந்தக் கிராமத்திலே கரையேறியிருந்த ஆயனர் மகள் சிவகாமியும், இப்போது நடன அரங்கத்தில் வந்து நின்ற கலா ராணி சிவகாமியும் ஒருவரேதான் என்று அந்தக் கிராம வாசிகளால் நம்ப முடியவில்லை.

கல்கி

கிராமத்திலிருந்த பெரிய வீடுகளைச் சேர்ந்த பெண்மணிகள் அன்று மத்தியானமே நாவுக்கரசர் மடத்துக்குப் போய்ச் சிவகாமியை நடனத்துக்காகச் சிங்காரித்திருந்தார்கள்.

சிவகாமியின் நடன அலங்காரமும் அணிபணிகளும் அவளுடைய முகத்தில் அப்போது பிரகாசித்த தெய்விகக் களையும் கிளர்ச்சியும் அவளுக்கு அத்தகைய புதுமைத் தோற்றத்தை அளித்திருந்தன.

அந்த மண்டபப் பட்டுக் கிராமத்து ஜனங்கள் அதுவரையில் அம்மாதிரி கண் கூசும்படியான திவ்ய சௌந்தரியத்தைக் கண்டதில்லை.

ஆரம்பத் திகைப்பு ஒருவாறு மாறியதும் ஜனங்கள் ஒருவருக்கொருவர் தங்களுடைய வியப்பைத் தெரிவித்துக் கொள்ள ஆரம்பித்தார்கள்.

"தேவலோகத்து நடன மாதர்களான அரம்பை, ஊர்வசி முதலியவர்கள் இப்படித்தான் இருந்திருப்பார்கள் போலிருக்கிறது!" என்றார் ஒருவர்.

"ஒருநாளும் இல்லை. அவர்கள் இவ்வளவு அழகாக ஒரு நாளும் இருந்திருக்க முடியாது!" என்றார் ஒருவர்.

"இந்தப் பெண்ணுடனே அந்தத் தேவலோக தாஸிகளை ஒப்பிடுவதே பிசகு. தில்லையம்பலத்தில் நடராஜப் பெருமானுக்குப் போட்டியாக நடனமாடிய சிவகாமி தேவியேதான் இப்படி அவதாரம் எடுத்து வந்திருக்கிறாள்!" என்று ஒரு பக்தர் கூறினார்.

"இல்லாமலா, நாவுக்கரசர் பெருமான் அவ்வளவெல்லாம் பாராட்டிப் பேசினார்!" என்று இன்னொரு பக்தர் பரவசமாகக் கூறினார்.

**ப**ளிச்சென்று சொல்லி வைத்தாற் போல் சபையிலே மறுபடியும் நிச்சப்தம் ஏற்பட்டது.

சிவகாமி நடனம் ஆட ஆரம்பித்து விட்டாள்!

ஆயனரின் கரதாளத்துக்கும் அவர் பாடிய ஸ்வரஜதிகளுக்கும் இணங்கச் சிவகாமி ஆடினாள்!

உள்ளூர் மத்தள வித்வான் ஒருவர் தம் வாணாளில் என்றுமறியாத உற்சாகத்துடன் மத்தளம் வாசித்தார். கும் கும் என்னும் மத்தளச் சத்தத்தோடு கலந்து பாதச் சதங்கை ஒலி கல் கல் என்று சப்திக்கச் சிவகாமி நிருத்தம் ஆடினாள்.

அந்த நிருத்தத்தில் மின்னலின் விரைவு காணப்பட்டது; மான் குட்டியின் துள்ளல் தோன்றியது; கானமயிலின் சாயல் விளங்கியது.

சிலசமயம் சிவகாமி பூமியிலே நின்று ஆடினாள்; சிலசமயம் வான மண்டலத்துக்குச் சென்று வெண்மதியின் கிரணங்களின் மீது நின்றாடினாள். சிலசமயம் நட்சத்திர மண்டலத்துக்கே போய் விண்மீன்களின் மத்தியில் பம்பரம்போலச் சுழன்று சுழன்று ஆடினாள்.

இப்படியெல்லாம் பிரமை கொண்ட சபையோருக்குச் சில சமயம் சிவகாமி தங்களுடைய கண்ணின் உள்ளே ஆடுவதாகத் தோன்றியது; தங்கள் இருதயமாகிய அரங்க மேடையில் நின்று குதூகலமாய் ஆடுவதாகவும் பிரமை உண்டாயிற்று.

சிவகாமி பம்பரம்போல் சுழன்றுடியபோது பார்த்துக் கொண்டிருந்தவர்களின் கண்கள் சுழன்றன; அரங்க மேடை சுழன்றது; அகல் விளக்குகள் சுழன்றன; கோயில் சுழன்றது; கோபுரங்கள் சுழன்றன; தூண்களை மாடத்துத் தங்க ஸ்தூபி சுழன்றது; வானமும் பூமியும் சுழன்றன; சந்திரனும் நட்சத்திரங்களும் சுழன்று சுழன்று வந்தன.

இவ்விதம் வெவ்வேறு காலப் பிரமாணங்களில், வெவ்வேறு ஜதிகளில், வித விதமான நிருத்த வகைகளை ஆடிச் சபையோரை கிறு கிறுக்க அடித்த பிறகு சிவகாமி சிறிது நேரம் சிரம பரிகாரம் செய்து கொள்வதற்காக மேடைக்குப் பின்புறம் சென்றபோது சபையில் பிரமாதமான ஆரவாரம் எழுந்தது.

ஆயனரின் அரண்ய வீட்டில் எட்டு மாதம் இருந்தும் சிவகாமியின் நடனத்தைப் பார்த்தறியாதவனான குண்டோதரனும் மற்றச் சபையினரைப் போலவே பரவசமடைந்து போயிருந்தான். நடனம் நின்ற பிறகும் அவன் தன்னை மறந்த நிலையிலேயே இருந்தபடியால், பக்கத்தி

விருந்த மாமல்லரைப் பார்த்து, "பிரபு!......" என்று ஆரம்பித்தான். மாமல்லரும் சிவகாமியின் நடனத்தில் பூரணமாய் ஈடுபட்டு ஆனந்த வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தாராயினும், அவர் தம்மையும் தமது சுற்றுப் புறத்தையும் மறந்து விடவில்லை. எனவே, குண்டோதரன் "பிரபு!" என்றதும் அவர் அவனை ஒரு குலுக்குக் குலுக்கினார். இதற்குள் பக்கத்திலிருந்த ஐந்தாறு பேரின் கவனம் குண்டோதரன் மேல் விழுந்திருந்தது. மாமல்லரின் குலுக்கலினால் தனது நினைவு அடைந்த குண்டோதரன், சுவாமி சந்நிதியை நோக்கி, "பிரபு!... இந்தத் தெய்விக நடனம் உனக்குத்தான் பிரீதி!" என்று பக்தி பரவசம் ததும்பிய குரலில் கூறி முடித்தான். "சந்தேகம் என்ன? இறைவனுக்குத்தான் பிரீதி!" என்று பக்கத்திலிருந்தவர்களும் ஆமோதித்தார்கள்.

* * *

சிவகாமி மீண்டும் அரங்க மேடைக்கு வந்து அபிநயம் பிடிக்கத் தொடங்கினாள். திருநாவுக்கரசர் பெருமானின்,

"வடிவேறு திரிசூலம்
தோன்றும் தோன்றும்
வளர்சடைமேல் இளமதியம்
தோன்றும் தோன்றும்"

என்னும் பாடலுக்குச் சிவகாமி அபிநயம் பிடித்தபோது, சபையோர் சாக்ஷாத் சிவபெருமானையே நேருக்கு நேர் தரிசித்தவர்களைப்போல் ஆனந்த வாரிதியில் மூழ்கினார்கள்.

பிறகு, எல்லாரும் எதிர்பார்த்தது,

"முன்னம் அவனுடைய நாமம்
கேட்டாள்"

என்னும் பாடலுக்குச் சிவகாமி அபிநயம் பிடிப்பாள் என்று. அதற்கு மாறாகச் சிவகாமி பின்வரும் பாடலைப் பாடி அபிநயமும் பிடிக்கலானாள்:

"வெள்ளநீர்ச் சடையனார்தாம்
வினவுவார் போலவந்தேன்
உள்ளமே புகுந்து நின்றார்க்கு
உறங்குநான் புடைகள்போந்து
கள்ளரோ புகுந்தீர் என்னக்
கலந்துநான் நோக்கநக்கு
வெள்ளரோம் என்று நின்றார்
விளங்கிளம் பிறையனாரே!"

ஓர் அறியாப் பெண்ணின் உள்ளமாகிய வீட்டுக்குள்ளே (அவள் கனவிலே) வெள்ள நீர்ச்சடையனாராகிய சிவபெருமான் ஏதோ விசாரிக்க வருகிறவர் போலே வந்து புகுந்து விடுகிறார். தூங்கிக் கொண்டிருந்த பெண் திடுக்கிட்டு எழுந்திருக்கிறாள். கண்ணைக் கசக்கிக் கொண்டு பார்க்கிறாள். யாரோ முன்பின் அறியாதவர் எதிரில் நிற்பதைக் கண்டு, "ஐயா! இப்படிச் சொல்லாமல் கொள்ளாமல் என் உள்ளத்திலே புகுந்த நீர் யார்? கள்ளரா?" என்று வினவுகிறாள். அப்போது வந்தவர் கண்ணோடு கண் கலக்கும்படி அந்தப் பெண்ணை உற்றுப் பார்க்கிறார். பார்த்து விட்டு நகை செய்கிறார். அந்த நகைப்போடு கலந்து, 'நானா கள்ளன்? கள்ளத்தன மென்பதே அறியாத வெள்ளை மனத்தவனாயிற்றே? அதற்கறிகுறியாக என் மேலேயும் வெண்ணீறு பூசி யிருக்கிறேனே, தெரியவில்லையா?' என்கிறார். வானத்திலே விளங்கிய இளம் பிறையைத் திருடித் தம் சிரஸிலே அணிந்து கொண்ட பெருமான்தான் இப்படி ஒன்றும் தெரியாதவர் போலே நடித்தார்! ஆகா! அவருடைய கள்ளத்தனத்தைச் சொல்வேனா? அல்லது கள்ளமற்றவர் போலே அவர் நடித்த நடிப்பைச் சொல்வேனா?......

மேற்கூறிய இவ்வளவு இதயப் பாடுகளும் வெளியாகும் படியாகச் சிவகாமி தன் முக பாவங்களினாலும், அங்கங்களின் சைகைகளினாலும், கைவிரல்களின் முத்திரையினாலும் உணர்ச்சியோடு கலந்து அற்புதமாக அபிநயம் பிடித்தாள்.

"கள்ளரோ புகுந்தீர்?" என்று கூறி அபிநயம் பிடித்தபோது, சிவகாமியின் கண்கள் அவளை யறியாமல் சபையில் ஒரு பக்கத்தில் இருந்த மாமல்லரின் கண்களை நாடின. அதைக் கவனித்த மாமல்லரின் முகத்தில் இயல்பாகப் புன்சிரிப்பு உண்டாயிற்று. மறுகணம் அவர் தன் நினைவு பெற்று, சிவகாமியின் அபிநயக் கலைக்கு இடை

ருடைய முயற்சியில் பெரிய விசேஷம் என்ன வென்றால், கொடையாளர் ஜாபிதாவில் முஸ்லிம் அன்பர்களின் பெயர்கள் தலைமை வகிப்பதுதான்.

ஸ்ரீ ஷண்முகசுந்தரம் எழுதியுள்ள உற்சாகம் ததும்பும் கடிதத்தில் குறிப்பிட்டிருப்பதாவது :—

“எல்லா பாரதி அபிமானிகளுக்கும் பாரதி ஞாபகச் சின்ன நிதிக்குப் பணம் அனுப்ப வேண்டும் என்ற அபிப்பிராயம் மனதில் இருக்கும். ஆனால், மணியார்டர் பாரம் பூர்த்தி செய்ய முடியாமலோ, அவகாசம் இன்றியோ, சோம்பல்பட்டுக் கொண்டோ இருக்கலாம். அப்பேர்ப்பட்டவர்களிடம் தொண்டர்கள் சென்று வசூல் செய்ய ஆரம்பித்தார்களானால் அவர்கள் உடனே எடுத்துக் கொடுத்துச் சந்தோஷத்துடன் அனுப்புவார்கள் என்பதில் சந்தேகமில்லை.”

நமது சொந்த அநுபவத்திலிருந்து ஸ்ரீ ஷண்முகசுந்தரம் கூறியுள்ள மேற்படி விஷயத்தில் நமக்கும் சந்தேகம் கிடையாது. எனினும், மற்றவர்கள் வந்து கேட்பதற்கோ, தூண்டுதல் செய்வதற்கோ கூட அவசியமில்லாதபடி தமிழ் மக்கள் தங்கள் கடமையை நிறைவேற்றி விடுவார்கள் என்று தோன்றுகிறது.

* * *

கோயமுத்தூரில் கூடிய எழுத்தாளர் மகாநாட்டில் ஆதரிக்கப்பட்ட தீர்மானத்தைக் காரியத்தில் நிறைவேற்றி வைப்பதில் சில எழுத்தாளர் அன்பர்கள் ஊக்கங் காட்டி வருகிறார்கள்.

யாழ்ப்பாணம் “ஈழகேசரி” ஆசிரியர் ஸ்ரீ அரிய ரத்தினம் ஊருக்குத் திரும்பிச் சென்றதும் தமது பத்திரிகையில் பாரதி நிதியைப் பற்றிக் கட்டுரை எழுதி விருப்பதுடன், நன்கொடை அனுப்புகிறவர்கள் “ஈழகேசரி”க்கே அனுப்பலாமென்றும், அவர்களுடைய பெயர்கள் “ஈழகேசரி”யில் வெளியாகுமென்றும், மொத்தத் தொகை நமக்கு அனுப்பப்படுமென்றும் தெரிவித்திருக்கிறார். இந்தச் சௌகரியத்தை யாழ்ப்பாணத்துத் தமிழன்பர்கள் உபயோகப்படுத்திக் கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

நமது சென்னையில் “நவயுவன்” பத்திராதிபரின் நன்கொடை சென்ற இதழிலேயே வெளியாயிற்று. நன்கொடையுடன் வந்த கடிதம் வருமாறு :—

சென்னை,
22—11—44.

அன்பார்ந்த “கல்கி” அவர்களுக்கு :

பாரதியார் ஞாபகார்த்த வாசக சாலை அமைப்பதற்காகத் தாங்கள் ஆரம்பித்திருக்கும் திருப்பணியை வரவேற்கிறேன். தங்களுக்கு இப்படிப்பட்ட துணிவு ஏற்பட்டது எட்டயபுரத்துக்கு யோகமடித்துவிட்டது. இந்த அரிய சந்தர்ப்பத்தைத் தமிழர்கள் தங்கள் சொந்த 'விழிப்பாக'க் கருதி நிதிக்குப் பண உதவி செய்து ஊக்கமளிப்பார்கள் என்று நம்புகிறேன். இத்துடன் ரூபாய் இருபத்தைந்துக்குச் 'செக்' வருகிறது.

அன்புள்ள,
வீர. சிதம்பரம்,
“நவயுவன்”

* * *

முக்கியமான விஷயத்தை வேண்டுமென்றுதான் கடைசியில் வைத்துக்கொண்டிருக்கிறேன். தாராள மனங் கொண்ட தமிழர்களையும் தமிழன்பர்களையுமே தூக்கிவாரிப் போடும்படியாக ஒரு நன்கொடை வந்திருக்கிறது. ஸ்ரீ வி.எல். நரஸு அவர்கள் பாரதியார் நிதிக்கு ரூ. 2000 (எழுத்திலே இரண்டாயிரம்) அளித்திருக்கிறார். இந்த மகத்தான நன்கொடையினால் ஏற்பட்ட திகைப்பைச் சமாளித்துக்கொண்டு அடுத்த வாரத்திலேதான் அவருக்கு நான் வந்தனம் கூற வேண்டும்.

* * *

## இந்த வாரத்து வசூல்

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ வி. எல். நரஸு, (நரசு பிக்சர் சர்க்யூட்) சென்னை | ரூ. 2000 | 0 | 0 |
| கோம்பை, ஸப் போஸ்ட்-மாஸ்டர் க. ஷண்முகசுந்தரம் அவர்கள் மூலம் * | ரூ. 425 | 0 | 0 |
| ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய ஐயர், அட்வகேட், மயிலாப்பூர், சென்னை | ரூ. 100 | 0 | 0 |
| உசிலம்பட்டி, ஸ்ரீ எம். துரைராஜன் மூலம் * | 75 | 8 | 0 |
| திருச்சினாப்பள்ளி மில்ஸ் சிப்பந்திகள் (ஸ்ரீ கே. ஆர். செல்லப்பன் மூலம்) | 66 | 5 | 0 |
| சர்க்கார் ஸெகண்டரி டிரெய்னிங் ஸ்கூல் உபாத்தியாய மாணவர்கள், திண்டுக்கல் | 45 | 0 | 0 |
| எட்டயபுரம் ராஜா இலவசப் பள்ளி மாணவர்கள் | 40 | 2 | 6 |
| ஸ்ரீ வி. ஆர். சுந்தரராமன், கோஹாதி, அஸ்ஸாம் | 35 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். டி. சண்முகம் பிள்ளை, ரிடயர்டு டெபுடி கலெக்டர், குற்றாலம் | 25 | 0 | 0 |
| ஸ்ரீமதி கமலா அனந்த கிருஷ்ணன், தியாகராய நகர் | 25 | 0 | 0 |

* விவரம் அடுத்த இதழில் வெளியாகும்.

ஸ்ரீ சி. சிவசுப்ரமணியன், திருநெல்வேலி டவுன் 15 0 0

கே. பி. சுப்பையா & பிரதர்ஸ், சமுகரங்கபுரம், திருநெல்வேலி 15 0 0

தென் இந்திய யாதவ வாலிப சங்கம், பம்பாய் (ஆர். வி. பெருமாள் மூலம்) 15 0 0

பாரதி இளைஞர்கழகம், கோயமுத்தூர் 11 11 0

ஜனாப் எம். எஸ். அப்பாஸ், பெரியமேட், சென்னை 11 0 0

எம். நூர்தின், ஜவுளி வியாபாரம், சென்னை 11 0 0

எஸ். எல். சைபாபா, தேனி 11 0 0

ஸ்ரீ என். வரதராஜன், "கல்கி" ஏஜெண்ட், சேலம் 10 0 0

காரியதரிசி, பாரதி தமிழ்ச் சங்கம், கேதனூர், பல்லடம் (வழி) 10 0 0

கவிஞர் ஸ்ரீ எஸ். தேசிக விநாயகம் பிள்ளை, புத்தேரி 10 0 0

ஸ்ரீ எ. சிவராம கிருஷ்ண ஐயர், கடயநல்லூர் 10 0 0

ஸ்ரீ சி. வ. ஆ. தருமலிங்கம், புசல்லாவ, இலங்கை 10 0 0

ஸ்ரீ ப. மு. சிதம்பரம், புதுப்பட்டி, பொன்னமராவதி 10 0 0

ஸ்ரீ ஜே. எஸ். மணி, திருவனந்தபுரம் 10 0 0

ஸ்ரீ வி. வி. வி. ஆர். வி. பாலு, ஈரோடு 10 0 0

ரூ. 5: ஸ்ரீ கார்தி நாராயணன், சேலம் டவுன்; ஸ்ரீமதி மங்களத் தம்மாள், தஞ்சாவூர்; எஸ். வாஞ்சேசன், தஞ்சாவூர்; டி. என். சுப்பையா, திருநெல்வேலி ஜங்ஷன்; பி. எம். எ. மஜீத், கானியாலூர்; ஆர். சுப்ரமணிய பிள்ளை, சட்டணப்புளை, இலங்கை; ஜி. சவரி முத்து, கண்டு கன்னுவா; சி. எஸ். சதாசிவம், ஹவில்தார் கிளார்க்கு; அபிமானி, அம்பாசமுத்திரம்; ஆர். வெங்கடராமன், பூனா; டி. ரத்தினமுதலியார், மதுராந்தகம்; டி. எஸ். நாராயணசாமி, பெங்களூர்; என். எஸ். மணி, அட்வகேட், சென்னை; ஸெண்ட்ரல் நியூஸ் ஏஜென்ஸி, திண்டுக்கல்; டி. தம்புத்துரை, கல்கி ஏஜெண்டு யாழ்ப்பாணம்; எ. ஆறுமுகம் பிள்ளை, பேட்டை, திருநெல்வேலி; எஸ். அண்ணாமலை, காஞ்சி; காரியதரிசி, ஜவஹர் வாலிபர் சங்கம், பூந்தமல்லி; காரியதரிசி, தமிழ் மாணவர் சங்கம், செம்மாரா, கொல்லங்கோடு.

ஸ்ரீ வி. என். பி. தியாகராஜன், ராமநாதபுரம் ரூ. 4—1—0.

ரூ. 3: வி. டி. எஸ். மணி, வீரவநல்லூர்; பி. குமாரசுவாமி, வீரவநல்லூர்; வி. ராமகிருஷ்ணன், வீரவநல்லூர்; எஸ். எஸ். ஷண்முகம் பிள்ளை, திருநெல்வேலி; எஸ். எம். சாமி அய்யா, எட்டயபுரம்; வித்துவான் ஜி. சுப்பையா, செம்மாரா, கொல்லங்கோடு; எஸ். சுப்பய்யா செட்டியார், ஒலவக்கோடு; லக்ஷ்மி கம்பெனி, ஒலவக்கோடு; பி. நஞ்சப்ப கௌண்டர், ஒலவக்கோடு.

ஸ்ரீ கே. எஸ். சம்பத், சென்னை 3—3—0

எம். பாலசுப்ரமண்யம், சென்னை 2—3—0

பி. ராமலிங்கம், டோராடூன் 2—3—0

எஸ். பத்மநாபன், ஸ்ரீரங்கம் 1—8—0

ரூ. 2: மேலக்காவேரி கே. நாகராஜன், பம்பாய்; எஸ். டி. கே. என். சன்ஸ், வீரவநல்லூர்; ஆனந்தபவன், திருநெல்வேலி; எ. சரவணமுத்து, கொழும்பு; வி. கோபால், சென்னை; கே. பாகீரதி, மயிலாப்பூர்; கிருஷ்ண ஐயங்கார், காகிநாயக்கன்பட்டி, திருப்பத்தூர்; கே. எஸ். நாராயணமூத்தான், ஒலவக்கோடு; ஆர். வி. ஷண்முகம், ஈரோடு; வி. டி. மாணிக்கம், ஈரோடு; அருட்சுடர் வள்ளலார் சன்மார்க்க சபையார், ஈரோடு; எம். ஜகந்நாதன், ஈரோடு; டி. டி. சேஷாத்ரி, தஞ்சை; கே. பி. பாலசுப்ரமண்யம், லக்ஷ்மணபுரி.

ரூ. 1: கே. ராமஸ்வாமி, கடலூர், என். டி.; ஓவியர் எஸ். கோபாலன், பம்பாய்; வி. கே. ஜகந்நாதாச்சாரியார், பம்பாய்; ஆர். எஸ். கோபாலன், பம்பாய்; கே. வி. எஸ். ஸ்ரீனிவாசன், பம்பாய்; வி. கே. ராமாநுஜாசாரி, பம்பாய்; கே. ஜயபால், திருநெல்வேலி; தலைவர், பரசுராம் கிளப், கருந்தட்டாங்குடி; சிதம்பரம் செட்டியார், ஒலவக்கோடு; எ. நம்பி பிள்ளை, ஒலவக்கோடு; எம். பழனிவேலு, ஒலவக்கோடு; ஆர். எம். ராமஸ்வாமி, ஒலவக்கோடு; வி. கிருஷ்ணன் குட்டி, ஒலவக்கோடு; எஸ். சுப்புரத்தினம், ஈரோடு; எஸ். சித்தய்யா, ஈரோடு; டி. எ. சித்தநாதன், ஈரோடு; ஈ. வி. பழனிவேலு, ஈரோடு; வி. எஸ். கைலாசம், ஈரோடு; ஆர். ஆறுமுகம், ஈரோடு; வாணி விலாஸ் பிரஸ், ஈரோடு; டி. எஸ். சுப்பிரமணியம், ஷண்முகபவன், தஞ்சை; டி. என். ராமச்சந்திரன், தஞ்சை; எம். எஸ். ராமச்சந்திரன், திண்டுக்கல்; எம். எம். புஹாரி, கொழும்பு.

வீரமதி "தினசரி" ஏஜெண்டு மூலம் கண்கொடை: ரு. பழ. மு. ரூ. 2, சு. பழ. சுப. ரூ. 2, வெ. பழ. வெ. ரூ. 1, சுப. சா. ரூ. 1, சு. பழ. சா. ரூ. 1, ரு. பழ. ராம. கா. ரூ. 1, முரு. அழ. அ. ரூ. 1, ராம. அ. ரூ. 1, சு. வெ. கதி. ரூ. 1, கதி. சோ. ம. ரூ. 1. ஆக ரூ. 12—0—0

ஏற்கெனவே வசூல் ரூ. 4120—15—9

ஆக மொத்தம் ரூ. 7326—12—3

# தமிழர் உயர்கின்றனர்!

தமிழ் நாட்டையும் தமிழர்களையும் குறித்துப் பாரதியார் கொண்டிருந்த நம்பிக்கை வீண் போகவில்லை.

தமிழ் மக்களைப் பற்றி எல்லாரும் தாழ்த்திப் பேசிக்கொண்டிருந்த காலத்தில்,— தமிழரைத் தமிழரே குறைத்துப் பேசிக் கொண்டிருந்த காலத்தில்,— தமிழ் மக்கள் பாரதியாரையே பட்டினி போட்டுக் கொண்டிருந்த காலத்தில், அந்த மகான்,

“வாழிய செந்தமிழ்
வாழ்கநற் றமிழர்!”

என்று மனமார, வாயாரப் பாடினார்.

அத்தகைய அன்புள்ளம் வாய்ந்த கவி மன்னரின் நம்பிக்கையை இப்போது தமிழர்கள் மெய்ப்படுத்தி வருகிறார்கள்.

இந்த வாரத்தில் பாரதியாரின் ஞாபகச் சின்ன நிதி ரூ. 7000-த்துக்கு மேல் உயர்ந்துவிட்டதைக் குதூகலத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். இந்த நிதியின் உயர்வு தமிழ் மக்களின் உயர்வுக்கே அறிகுறி யாகுமென்று கருதுகிறோம்.

* * *

சமீபத்தில் வெளியாகியிருக்கும் “மகா கவி பாரதியார்”* என்னும் அருமையான புத்தகத்தில், “சென்னையிலே பாரதியாருக்கு இரண்டு சிநேகிதர்கள் உண்டு; அவர்களிலே ஒருவர் ஹைகோர்ட் ஜட்ஜ் ஸ்ரீ வி. கிருஷ்ணசாமி ஐயர்...” என்று நமது வ. ரா. எழுதியிருக்கிறார்.

முதன் முதலில் பாரதியாரின் தேச பக்தி ததும்பும் பாடல்களைக் கேட்டுப் பரவசப்பட்டு, அவற்றைப் புத்தகமாக வெளியிடுவதற்கு உதவி புரிந்தவர் காலஞ்சென்ற நீதிபதி ஸர் வி. கிருஷ்ணசாமி ஐயர் என்று நாமும் கேள்விப்பட்டிருக்கிறோம்.

பிரசித்தி பெற்ற அந்தத் தந்தையின் புகழை இன்றைக்கும் விளக்கச் செய்து கொண்டிருக்கும் புதல்வர் ஸ்ரீ கே. பாலசுப்ரமண்ய ஐயர் அவர்களிடமிருந்து பின் வரும் கடிதம் கிடைத்திருக்கிறது :—

“ஆசிரமம்”, லஸ்,
மயிலாப்பூர்,
28—11—44.

உற்றறியாத புகழுடன் கூடிய ஸ்ரீ பாரதியார் அவர்கள் பிறந்த எட்டயபுரத்தில் அவர் நினைவு என்றைக்கும் வரும் படியாக ஒரு புத்தகாலயம் ஸ்தாபிக்கும் பொருட்டு ஒரு நிதி ஏற்படுத்தி அதற்குத் தமிழன்பர்களும் தேச பக்தர்களும் தம் தம் நன்கொடையை அனுப்புமாறு கேட்டுக் கொண்ட தங்களுடைய அறிக்கையை நான் பார்வையிட்டு ரொம்பவும் சந்தோஷமடைந்தேன். மேற்படி நிதிக்கு நானும் ஒரு செக் இத்துடன் அனுப்பியிருக்கிறேன்.

ஸ்ரீ பாரதியார் பிறந்த ஊரைத் தமிழ்த் தாய்க்குத் தொண்டு செய்யும் அன்பர்கள் எப்பொழுதும் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டியது கடமையாகும். ஆகையால் இந்த நிதி ஏற்படுத்த ஆரம்பித்த தங்கள் முயற்சியை மனப்பூர்வமாக மெச்சுகிறேன். தங்கள் பத்திரிகையில் தாங்கள் எழுதியுள்ள வசனங்களைப் பார்வையிடும் பொழுது எனக்கு 1908-ம் வருஷம் ஸ்ரீ பாரதியார் அவர்கள் முதல் முதலில் எங்கள் தகப்பனாரைக் கண்டு பேசிக்கொண்டிருந்த சம்பவம் நன்றாய் என் மனக்கண் முன் தோன்றி என் உடல் முழுவதும் ஆனந்தத்தால் மயிர்க் கூச்சல் இடும்படி செய்தது. எங்கள் தகப்பனார் பாரதியாரைப் பார்த்து அவருடைய பாட்டைக் கேட்டதுமே அவரிடத்தில் முழு மனதுடன் ஈடுபட்டு விட்டார். அது காரணமாகவே பாரதியாரின் “வந்தே மாதரம்” “மன்னும் இமயமலை எங்கள் மலையே” என்ற அடிகளோடு கூடின பாடல்களை அப்பொழுதே அச்சிட்டுத் தமிழ் நாடு முழுவதும் எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் மாணவர்கள் எல்லோரும் கற்றுக் கொள்ள வேணுமென்கிற பெரும் ஆர்வத்துடன் பாரதியாரிடம் ரூ. 100 கொடுத்து, அவரை ரொம்பவும் வணங்கி, பாடல்களை அவசியம் அச்சிட வேணுமென்று ஆவலுடன் கேட்டுக் கொண்டார்............ இங்ஙனம்,

கி. பாலஸுப்பிரமணிய அய்யர்.

தந்தையார் அன்று பாரதியாரிடம் புத்தகம் அச்சிடுவதற்காகக் கொடுத்த அதே தொகையை இன்று புதல்வர் பாரதியாரின் ஞாபகச் சின்ன நிதிக்காக அனுப்பியுள்ளார். அதோடு நம்முடைய முயற்சிக்கும் ஆசிமொழி கூறியுள்ள இந்தப் பெரியாருக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

* * *

ஆங்காங்கு நிதி வசூலித்து மொத்தமாய் நமக்கு அனுப்பும் அரிய பணியைச் சில அன்பர்கள் செய்து வருகிறார்கள். இவர்களில் பம்பாய்த் தமிழ்ச் சங்கத்துக்கு அடுத்தபடியாகக் கோம்பை சப்-போஸ்ட் மாஸ்டர் ஸ்ரீ க. ஷண்முகசுந்தரம் அவர்களின் சிறந்த தொண்டைக் குறிப்பிட வேண்டும். கோம்பை, பண்ணைப்புரம், கரியணம்பட்டி, தேவாரம் என்னும் நாலு கிராமங்களிலிருந்து இந்த அன்பர் ரூ. 425 வசூல் செய்து அனுப்பியிருக்கிறார். இவ

* சக்தி காரியாலயம், சென்னை; விலை ரூ. 3.

வேண்டும்; மள மள வென்று ஓடி டபார் என்று முடிய வேண்டும்; இல்லாவிட்டால் என்ன கதை?'' என்பார்கள் சிலர். ''ஏது இருந்தாலென்ன? இல்லாவிட்டால் என்ன? வாசக நடையில் ஜீவன் இருக்கிறதா?'' என்று சிலர் கேட்பார்கள். ''கதையின் போதனை என்ன? சமூகத்தை உயர்த்தும் இலட்சியம் கொண்டதா?'' என்று கேட்பவர்களும் உண்டு.

சில சமயம், தலைசிறந்த அறிஞர்களுக்குப் பிடிக்கும் கதைகள், சாதாரண ஜனங்களுக்கு அவ்வளவு ரஸிப்படாமல் போய்விடும்.



ருடாலி

—இரண்டாம் பரிசு—

ருஷிய நாட்டின் பிரசித்தி பெற்ற செக்காவ் என்னும் ஆசிரியரின் சிறு கதைகள்தான் உலக இலக்கியத்திலேயே சிறந்தவை என்று நவீன இலக்கிய நிபுணர்கள் அபிப்பிராயப் படுகிறார்கள். அந்தக் கதைகளைப் படித்தால் நம்மில் 100-க்கு 99 பேருக்கு ''அப்படி ஒன்றும் பிரமாதமாயில்லையே?'' என்றுதான் சொல்லத் தோன்றும்.



ஜே. அனந்தவிஜயம்

—இரண்டாம் பரிசு—

இலக்கிய விஷயங்களில் அபிப்பிராய மாறுபாடு இருப்பது சகஜமே. ஆனால், அதைச் சண்டை போடும் அளவுக்கு கொண்டு போவது பண்பாடு போதாமைக்கு அறிகுறி.

சாப்பாடு விஷயத்திலேயே இதைப் பார்க்கலாம். ஒருவருக்கு முருங்கைக்காய் பிடிக்காது என்று வைத்துக் கொள்வோம். அவர் பண்பாடு இல்லாத மனுஷராயிருந்தால், முருங்கைக்காய் சாம்பார் பரிமாறிக் கொண்டிருக்கும் போது, ''ஐயய்ய! முருங்கைக்காயை மனுஷன் சாப்பிடுவானா?'' என்று சொல்வார்! பண்பாடு உள்ள மனிதரோ, இதே சந்தர்ப்பத்தில், ''எனக்கு முருங்கைக்காய் அவ்வளவாகப் பிடிக்காது; இருந்தாலும், உங்களுக்குப் பிடிக்குமே என்று அதையே பண்ணச் சொன்னேன்!'' என்பார்.

இலக்கிய விஷயங்களில் இந்த மாதிரி சகிப்புத்தன்மை காட்டுவது இலக்கியப் பண்பாட்டுக்கு அறிகுறியாகும்.

* * *

நமது சிறு கதைப் பரிசுப் போட்டி விஷயத்திலும், பஞ்சாயத்து அங்கத்தினருக்குள் அபிப்பிராய பேதம் நிரம்ப இருக்கத்தான் செய்தது. ஆனால் எல்லாரும் இலக்கியப் பண்பாடு உள்ளவர்களாதலால் அபிப்பிராயங்களைக் கலந்து கொண்டு ஏகோபித்த முடிவுக்கு வருவது சாத்தியமாயிற்று.



வேதாஸ்ரீ

—இரண்டாம் பரிசு—

கடைசி நாள் முடிவாகத் தீர்ப்பளிப்பதற்காகக் கூடிய பஞ்சாயத்துக் கூட்டத்தின் போது, ராஜாஜி கூடப் பிரசன்னமாயிருந்தார். காரியத்தைச் சீக்கிரம் முடிக்க வேண்டும் என்னும் பரபரப்பினால், ''ஒரு மாதிரி நீங்கள் மத்தியஸ்தம் செய்து விடுங்களேன்!'' என்று நான் கேட்டேன். ராஜாஜியோ, ''கூடவே கூடாது! பஞ்சாயத்தாரே விவாதித்து யோசித்து ஏகோபித்த முடிவுக்கு வந்தாக வேண்டும்'' என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார்.

அவ்விதமே எல்லாருடைய அபிப்பிராயங்களும் தெரிவிக்கப்பட்டு, வாதப் பிரதிவாதங்களும் ஆட்சேப சமாதானங்களும் தாராளமாய் நடந்து, கடைசியில் ஏகோபித்த தீர்ப்பு அளிக்கப் பட்டது!

அக்டோபர் மாதம் பதினைந்தாம்தேதி ''கல்கி''யில் பிரசுரமான ஏகோபித்த முடிவின் வாசகம் ராஜாஜியின் வாசகம் என்னும் இரகசியத்தையும் இங்கே குறிப்பிட்டு வைக்கிறேன்.

* * *

அபிப்பிராய பேதம் கொண்ட வாசகர்கள் மறுபடியும் ஒரு தடவை அல்லது இரண்டு தடவை ஆறு கதைகளையும் சேர்த்தாற் போல் வாசித்துப் பார்த்தார்களானால், அவர்களும் அநேகமாகப் பஞ்சாயத்தாரின் ஏகோபித்த முடிவுக்கே வந்து சேர்வார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.



பார்வதி

—இரண்டாம் பரிசு—

* * *

இந்தக் கதைப் போட்டிப் பஞ்சாயத்து வேலை எவ்வளவோ தொல்லையானது. கதைகளைப் படித்தும், சிந்தித்தும், தாரதம்யம் பார்த்தும், விவாதம் செய்தும், ஏறக்குறைய மூளை குழம்பிப் போகும் நிலைமைக்குப் பஞ்சாயத்தார் வந்துவிட வேண்டியதாயிருக்கும். மொத்தம் பரிசு கொடுத்த ஆயிரம் ரூபாயை ஒவ்வொரு பஞ்சாயத்தாருக்கும் தனித் தனியே கொடுத்தால்கூட, அது தகுந்த சிரம தக்ஷிணை ஆகாது! இவ்வளவு கடினமான வேலையைத் தமிழன்பு காரணமாக ஏற்றுக் கொண்டு செய்து முடித்த பஞ்சாயத்து அங்கத்தினர்களுக்கு என் இருதய பூர்வமான நன்றியைத் தெரிவிப்பதுடன், இம்மாதிரி வேலையை அவர்களுக்கு வருஷா வருஷம் கொடுப்பதாக உத்தேசம் என்பதையும் தெரியப்படுத்திக் கொள்கிறேன்.

# உபய குசலோபரி

சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற ஆறு கதைகளும் சென்ற "கல்கி" இதழோடு பிரசுரிக்கப்பட்டு முடிந்தன.

முதல் இரண்டு கதைகளுக்கு ரூ. 300-வீதமும் பிந்தைய நாலு கதைகளுக்கு ரூ. 100 வீதமும் ஆக மொத்தம் ஆயிரம் ரூபாய் மேற்படி கதைகளை எழுதிய ஆசிரியர்களுக்கு அனுப்பப் பெற்றது.

ஆறு கதைகளையும் அச்சிலே படித்த பிறகு எனக்கு அளவற்ற மகிழ்ச்சியும் திருப்தியும் உண்டாயின. இந்த 1944-ம் ஆண்டில் தமிழ் வசன இலக்கியத்துக்குக் "கல்கி" செய்த தொண்டைக் குறித்து நாமும் நேயர்களும் பெருமை கொள்ள இடமிருக்கிறது.

ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு அமைப்பு; ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு மேன்மை; ஒவ்வொரு கதையும் தமிழர் வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்தை விளக்குவது; ஒவ்வொன்றிலும் தமிழ் நடை தனி; கதைப் போக்குத் தனி; மனோதர்மம் தனி.

மொத்தத்தில், நான் உத்தேசித்திருக்கிறபடி இந்த ஆறு கதைகளையும் சேர்த்து ஒரு புத்தகமாகப் பிரசுரம் செய்தால், தமிழகத்தில் சிறுகதை இலக்கியம் எப்படிச் சிறந்து வளர்ந்து வருகிறது என்பதற்கு அது சிறந்த அத்தாட்சியாயிருக்குமென்பதில் சந்தேகமில்லை.

* * *

பரிசு பெற்ற கதைகள் "கல்கி" நேயர்களின் மனதைப் பெரிதும் கவர்ந்திருப்பதாக எனக்கு வந்திருக்கும் பல கடிதங்களிலிருந்து தெரிய வருகிறது.

சில நேயர்கள் பரிசுக் கதைகளின் தராதரத்தைப் பற்றித் தங்கள் அபிப்பிராய பேதத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். அப்படித் தெரிவிக்கப்பட்ட அபிப்பிராயங்களும் ஒன்றோடொன்று மாறுபட்டிருக்கின்றன. அதாவது, முதல் இரண்டு கதைகள் வெளியானதும், முதல் பரிசு முழுமையும் "சுயம்வரத்துக்கே கொடுத்திருக்க வேண்டும்" என்று சிலரும், "ஏழ்மையில் இன்பத்துக்கே முழுப் பரிசு கொடுத்திருக்க வேண்டும்" என்று இன்னும் சிலரும் தெரிவித்தார்கள்.

அதோடு போகவில்லை. பிறகு, ஒவ்வொரு கதையும் வெளியாக ஆக, "இது ரொம்ப ஜோர்! இதற்கல்லவா முதற் பரிசு கொடுத்திருக்க வேண்டும்?" என்று கடிதங்கள் வந்தன. "உள்ளும் புறமும் எவ்வளவு அழகான கதை?" "பாய்ச்சல் மாட்டுக்கு முதல்பரிசுகொடாதது ரொம்பவும் அநியாயம்!" "வறுமையா? பொறுமையா?— என்னும் கதை மற்ற எல்லாக் கதைகளையும் தூக்கி அடித்து விட்டதே? அதற்கு முதற் பரிசு கொடுக்காத காரணம் வறுமையா? பொறுமையா?" என்றெல்லாம் நேயர்கள் கேட்க ஆரம்பித்து விட்டார்கள்.



ஸ்ரீராம் குருசாமி
—முதற் பரிசு—

இந்தக் கேள்விகள் எல்லாம் உண்மையில் எனக்கு மிக்க மகிழ்ச்சியை அளித்தன. "கல்கி" நேயர்களிடையே இலக்கிய மனப்பான்மை எவ்வளவு தூரம் வளர்ந்திருக்கிறதென்பதை அவை காட்டின.

நேயர்கள் கேட்ட அவ்வளவு கேள்விகளும் எனக்குப் புதிதாயிருக்கவில்லை. எல்லாம் பஞ்சாயத்தாரின் கூட்டத்தில் ஏற்கெனவே அடிபட்டு என் காதிலே நிறைந்திருந்த கேள்விகள்தான்!

பரிசுக் கதைகளை முடிவு செய்வது பஞ்சாயத்தாருக்கு எளிதான காரியமாயில்லை என்பதை நேயர்களுக்கு இப்போது தெரிவித்துக் கொள்கிறேன்.

ஒரு தடவை "அடுத்த இதழில் சிறுகதைப் போட்டி முடிவு வெளியாகும்!" என்று நான் குறிப்பிட்டிருந்ததும், அடுத்த இதழில் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு "இன்னும் ஒரு மாதம் ஆகும்" என்று குறிப்பிட்டிருந்ததும் நேயர்களுக்கு நினைவு இருக்கலாம்.

நான் எதிர்பார்த்ததுபோல் பளிச்சென்று ஏகமனதாகத் தீர்ப்பளிப்பது சாத்தியப்படாமல், பஞ்சாயத்தார் ஒவ்வொருவரும் தனித்தனியாக யோசனை செய்ய அவகாசம் கேட்டதுதான் மேற்படி தள்ளிப் போடலுக்குக் காரணமாகும்.

* * *

இலக்கிய விஷயங்களில் அபிப்பிராய பேதம் ஏற்படுவது இயற்கை; இலக்கிய வளர்ச்சிக்கு அது அவசியமுமாகும்.

கைதேர்ந்த சமையற்காரன் தன் கைப்பட விருந்து தயார் செய்கிறான். எல்லாப் பண்டங்களுமே அபூர்வமாகச் செய்திருக்கிறான். ஆனாலும், சாப்பிடுகிறவர்களில் ஒவ்வொருவருக்கு ஒவ்வொன்று வெகு ருசியாயிருக்கிறது. "இன்றைக்கு சாம்பார் வெகு ஜோர்!" "மைசூர் ரஸம் அற்புதம்!" "அவல் பாயஸத்துக்கு இணை உலகத்திலேயே இல்லை" என்று சொல்கிறார்கள். நல்ல சாப்பாட்டு ரஸிகரோ, "மொத்தத்தில் இன்று விருந்து ஒன்றாம் நம்பர்!" என்று முத்தாய்ப்பு வைத்து விடுகிறார்.

இலக்கிய ருசியும் இப்படி மாறுபட்டிருப்பது இயல்பேயாகும். மனோதத்துவத்தை நன்கு விளக்கும் சிறு கதைதான் உயர்வானது என்று சிலர் கருதுவார்கள். "கதையிலே விறுவிறுப்பு



கி. ரா. கோபாலன்
—முதற் பரிசு—

இருக்க முடியாது? என்னென்ன நிர்மாண வேலைத் திட்டங்களைத்தான் நிறைவேற்றி யிருக்க முடியாது?

காங்கிரஸ் வாதிகள் மட்டும் இப்போது அதிகாரத்திலிருந்தால், இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு வர வேண்டி யிருக்கும் பெருந் தொகைகளை எவ்வளவு நல்ல முன்னேற்றத் திட்டங்களுக்கு உபயோகப் படுத்தக் கூடாது?

சின்னஞ் சிறு திருவாங்கூர் சமஸ்தானத்தில் ஸர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் என்னென்ன தொழில் அபிவிருத்தித் திட்டங்களை யெல்லாம் போட்டு அமர்க்களப்படுத்திக் கொண்டிருக்கிறார்?

* * *

தொழில் அபிவிருத்தி, பொருளாதாரப் பெருக்கம் எல்லாம் ஒருபுறம் இருக்க, காங்கிரஸ் சிறையில் இல்லாமல் அதிகாரத்திலிருந்திருந்தால் அரசியல் முன்னேற்றமும் எவ்வளவோ கைகூடி யிருக்கும். இதற்குள் ஏறக்குறையப் பூரண சுதந்திரத்தையே ஸ்தாபித்திருக்கலாம்.

அந்தக் கெட்டிக்கார டிகால் பிரான்ஸிலே என்ன செய்தார், பாருங்கள்! பிரான்ஸை நேசக் கட்சியார் முழுதும் ஜயித்து, ஜெர்மானியரை விரட்டியடித்து, தாங்களும் விலகிக் கொண்டு, பிரான்ஸ் தேசத்தைக் குத்திறற்போல் தம் கையிலே கொடுக்க வேண்டுமென்று டிகால் உட்கார்ந்திருந்தால், என்ன நடந்திருக்கும்? உட்கார்ந்து கொண்டே இருக்க வேண்டியதுதான்!

அதற்கு மாறாக அந்தக் கைகார மனுஷர் என்ன செய்தார்?

நேசக் கட்சி சைன்யம் பிரான்ஸில் இறங்கியதும் டிகாலும் போய்விட்டார். அவர்கள் பாரிஸுக்குப் போவதற்குள் இவர் முன்னால் போய் உட்கார்ந்து கொண்டார். ஒரு அரசாங்கத்தையும் ஸ்தாபித்தார். "பிரான்ஸை அலட்சியம் செய்வீர்களா?" என்று அதட்டினார். "பிரஞ்சு சைன்யத்துக்கு ஆயுதம் எங்கே?" என்று கர்ஜித்தார். இதோ டிகாலின் பிரஞ்சுப் படை ஜெர்மன் எல்லைப்புறத்துக்குச் சென்று ஒரு கோட்டையையும் பிடித்து விட்டது.

"ஜெர்மனியைப் பங்கு போடும்போது பிரான்ஸுக்கும் சம பங்கைப் போடு!" என்று இப்போது கோஷிக்கிறார்.

யுத்த காலங்களிலே அனுசரிக்க வேண்டிய முறை இதுதான். கையிலிருக்கும் அதிகாரத்தையும் கை விட்டவர்கள், ஒன்றும் செய்ய முடியாமல் கையைப் பிசைந்து கொண்டிருக்கும்படி நேரும்.

இந்த விஷயத்தைத்தான் ராஜாஜி தமது நாகபுரி பிரசங்கத்தில் வற்புறுத்தியிருக்கிறார். இதை எதற்காக இப்போது சொல்ல வேண்டும், நடந்து போன தவறைப் பற்றிச் சொல்வதில் என்ன பயன், அதில் என்ன சந்தோஷம் என்று கேட்டால், வெறுமனே குற்றங் கண்டு பிடிக்கும் சந்தோஷத்துக்காக அவர் சொல்ல வில்லை.

மறுபடியும் அதிகாரத்தைக் கைப்பற்றக் கூடிய சந்தர்ப்பம் ஒரு வேளை சீக்கிரத்தில் — அதாவது யுத்தம் முடியும் சமயத்தில் — வரலாம்; அப்போதாவது நாம் தயாராயிருக்க வேண்டும்; மறுபடியும் கோட்டை விட்டுவிடக் கூடாது; சென்ற ஐந்து வருஷம் வீணாய்ப் போனதுபோல் மறுபடியும் பல வருஷங்கள் பயனின்றிப் போக விடக் கூடாது — என்னும் எண்ணத்துடன்தான் ராஜாஜி மேற்படி எச்சரிக்கையை இப்போது தந்திருக்கிறார்.

* * *

ராஜாஜியின் நாகபுரிப் பேச்சு சில மிதவாதிகளிடையே பரபரப்பை உண்டு பண்ணி யிருப்பதாகத் தெரிகிறது.

"நாங்கள் இத்தனை நாள் சொல்லி வந்ததைத்தான் இப்போது ராஜாஜி சொல்கிறார்! சபாஷ்! எங்கள் சமர்த்தே சமர்த்து!" என்று அவர்கள் தங்கள் முதுகில் தாங்களே 'ஷொட்டு'க் கொடுத்துக் கொள்கிறார்கள்.

ஆனால் மிதவாதிகள் சொல்லுவதற்கும் ராஜாஜி சொல்லுவதற்கும் கொஞ்சம் வித்தியாசம் இருக்கத்தான் செய்கிறது.

பூனையும் எலி வேட்டையாடுகிறது; புலியுந்தான் மிருக வேட்டையாடுகிறது. இரண்டும் ஒன்றாகி விடுமா?

அயர்லாந்திலே டிவாலராவும் அரசாங்க அதிகாரத்தைக் கைப்பற்றி ஆட்சி நடத்தி வருகிறார்.

இந்தியாவிலே டாக்டர் கரே, டாக்டர் அம்பேத்கார், ஜே. பி. ஸ்ரீவாத்ஸவா முதலியவர்களும் நிர்வாக சபைப் பதவியைக் கைப்பற்றி ஆட்சி நடத்தி வருகிறார்கள்!

டிவாலராவின் ஆட்சியும், இந்த மகானுபாவர்களின் ஆட்சியும் ஒன்றாகி விடுமா?

அந்த இரண்டு ஆட்சிக்கு முள்ள வித்தியாசம், மிதவாதிகளின் உத்தியோகப் பிச்சைக் கொள்கைக்கும், ராஜாஜி கூறும் அதிகாரத்தைக் கைப்பற்றும் கொள்கைக்கும் உண்டு!

நமது நாட்டில் பலருடைய மனப்போக்கு இப்படித்தான் இருக்கிறது. ராஜாஜி "வேண்டாம்!" என்று கூறிய பாதையை மேற்கொண்டதினால் தேசம் மகத்தான நஷ்டத்தை அடைந்திருக்கிறது. அவ்விதம் ராஜாஜி சொன்னது பலித்துவிட்டதே என்பதற்காக அவர் மேலேயே கோபித்துக் கொள்கிறோம்! தவறு அவர்பேரில்தான் என்று கூடச் சிலர் சொல்கிறார்கள்!

* * *

நாம் செய்த தவறு என்ன, அதனால் என்ன நஷ்டம் அடைந்தோம் என்பதைக் கொஞ்சம் ஞாபகப்படுத்திக் கொள்ளலாம்.

ஐந்து வருஷத்துக்கு முன்னால் காங்கிரஸ் வாதிகளின் கையிலிருந்த மாகாணங்களின் ஆட்சியைக் கைவிட்டது பெரிய பிசகு.

அதற்குப் பிறகு, பிரிட்டிஷார் தோல்வியடைந்து கொண்டிருந்த சமயத்தில், எப்படியாவது இந்தியாவைச் சரிக்கட்டிக் கொள்ள வேண்டுமென்று ஓடி வந்த கிரிப்ஸைக் கைவிட்டது அதைவிடப் பெரிய பிசகு.

"ஐயைய! கிரிப்ஸ் திட்டமா? கிரிப்ஸ் திட்டத்தைக் கையால் தொடுவார்களா? மனதாலும் நினைப்பார்களா? ஐயைய! கிரிப்ஸ் திட்டத்தை ஒப்புக்கொள்ள வேண்டும் என்று சொல்கிறவர்கள் கூட இருக்கிறார்களா? இது என்ன உலகம்! இது என்ன மாயை?" என்று சொல்லும் பிரகஸ்பதிகள் இருக்கிறார்கள். இவர்களுக்குக் கிரிப்ஸ் திட்டம் இன்னதென்பதே அநேகமாகத் தெரியாது. தெரியாமல் உளறினால்தான் தைரியமாக உளற முடியுமல்லவா?

இதே பிரகஸ்பதிகள்தான் முனிசிபாலிடி குப்பைத் தொட்டிகளையும், ஜில்லா போர்டு சத்திரம் சாவடிகளையும் கைவிடவே கூடாதென்று கட்டிக் கொண்டு அழுகிறவர்கள்!

முனிசிபாலிடிகளையும் ஜில்லா போர்டுகளையும் கட்டி அழுதுகொண்டு தேச விடுதலைக்காக வீரப்போர் நடத்துவது சாத்தியம் என்றால், மாகாண அரசாங்கங்களையும், கிரிப்ஸ் திட்டப்படி கிடைக்கக்கூடிய மத்திய அரசாங்கத்தையும் வைத்துக்கொண்டு ஏன் சுதந்திரப் போர் நடத்திப் பூரண சுதந்திரத்தை அடையக் கூடாது?

* * *

சமாதான காலத்தில் சுதந்திரப் போருக்கு அனுஷ்டிக்க வேண்டிய முறைகள் வேறு; யுத்த காலத்தில் அனுஷ்டிக்க வேண்டிய முறைகள் வேறு.

யுத்த காலத்தில் கையில் உள்ள அதிகாரங்களைக் கெட்டியாக இறுக்கிப் பிடித்துக் கொள்ள வேண்டும். சமயம் நேரும்போதெல்லாம் புதிய அதிகாரங்களைக் கைப்பற்றி வர வேண்டும். அப்படிக் கையில் இருக்கும் அதிகாரங்களை வைத்துக்கொண்டு, இந்தியாவின் பூரண சுதந்திர இலட்சியத்தை ஓயாமல் வற்புறுத்தி வர வேண்டும். இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கையின் ஒலி உலகமெல்லாம் முழங்கும்படியாகப் பிரசாரம் செய்ய வேண்டும்.

யுத்தத்தில் பிரிட்டிஷ் கட்சி ஜயிப்பதாக வைத்துக் கொண்டாலும் சரி, தோற்பதாக வைத்துக் கொண்டாலும் சரி. மேற்கண்ட முறைதான் யுத்த காலத்துக்குப் பொருத்தமானது என்று ராஜாஜி சொன்னார். அதைக் கேட்காமல் காங்கிரஸ் 'அதிகாரத் துறவு' மார்க்கத்தைக் கைப்பற்றிய காரணத்தினால் சென்ற ஐந்து வருஷத்தில் தேசம் அடைந்திருக்கும் நஷ்டம் அற்பசொற்பமானதன்று. அரசியல் துறையிலும் நஷ்டம்; மற்ற முன்னேற்றத் துறையிலும் நஷ்டந்தான்.

அபரிமிதமான தொழில் முன்னேற்றத்தை ஏற்படுத்துவதற்கும், பணம் தேவையான எத்தனையோ நிர்மாணத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கும் இந்தியாவிற்குச் சென்ற ஐந்து வருஷத்தைப் போன்ற சந்தர்ப்பம் வாய்த்தது கிடையாது.

உதாரணமாக, ஒன்று குறிப்பிடுவோம். யுத்தத்துக்கு முன்னால் சில ஜில்லாக்களில் மதுவிலக்குத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவது பிரம்மப் பிரயத்தனமாயிருந்தது. அந்தப் பண நஷ்டத்தைச் சரிக்கட்டுவதற்குப் புது வரி போடவேண்டியிருந்தது.

ஆனால், யுத்த காலத்தில் எவ்வளவு சுலபமாக மதுவிலக்குத் திட்டத்தை நிறைவேற்றியிருக்கலாம்!

மாகாண கஜானாக்களில் பணம் நிரம்பி வழிந்து பணத்தை இன்ன செய்வதென்று தெரியாமல் அல்லவா இப்போது தவிக்கிறார்கள்?

ஒரே மூச்சில் மாகாணம் முழுவதிலும் மதுவிலக்குச் செய்திருக்கலாமே?

ஆயிரம் கோடி ரூபாய்க்கு நோட்டு அச்சிடப்பட்டிருக்கும் காலத்தில் என்னென்ன சீர்திருத்தங்கள்தான் செய்

---

ஐந்து ரூபாய் பரிசு: *சென்ற இதழில் வெளியான "என்னத்தைச் செய்ய?" என்னும் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: என். ஆறுமுகம், பெரம்பூர் பாரக்ஸ், சென்னை.*

கோடை காலத்துக்குள் வெற்றி!'' என்று சொல்லக்கூடிய நிலைமைக்கு வந்திருக்கிறார்கள்.

அபிப்பிராய உரிமையும், அதிகாரத்திலுள்ளவர்களின் தவறுகளை எடுத்துக் காட்டிக் கண்டிக்கும் உரிமையும் பிரிட்டனில் இருந்திராவிட்டால், சேம்பர்லினின் அஸமஞ்ச ஆட்சி மாறிச் சர்ச்சில் அதிகாரத்துக்கு வந்திருக்க மாட்டார். ஐந்து வருஷத்தில் ஒரு லட்சம் ஆகாச விமானம் தயாராகியிராது. பிரிட்டிஷ் இராணுவ அதிகாரிகள் தங்களுடைய பத்தாம் பஸலி ஆயுதங்களையே நம்பிக் கொண்டிருந்து கோட்டை விட்டிருப்பார்கள். பிரிட்டன் இருந்த இடம் எப்போதோ புல் முளைத்துப் போயிருக்கும்.

இதற்கு மாறாக ஜெர்மனி, இதாலி ஆகிய நாடுகளில் சர்வாதிகார ஆட்சியின் கீழ் அபிப்பிராய உரிமை என்பது அடியோடு பாதிக்கப்பட்டிருந்தது. அங்கே அதிகாரத்திலிருந்தவர்களின் தவறுகளை எடுத்துக் காட்டும் உரிமை கிடையாது. அப்படி எடுத்துக் காட்டியவர்களுக்குக் கடுந் தண்டனை. எனவே, தவறுகளை எடுத்துக் காட்டியவர்களும் கிடையாது. தவறுகளைத் திருத்திக் கொள்ளும் அவசியமும் இல்லை. இதனாலேயே, ஜெர்மானியர் எவ்வளவோ திறமைசாலிகளாயிருந்தும், எவ்வளவோ முன்னேற்பாடுகள் செய்திருந்தும், எவ்வளவோ கற்பனைக் கெட்டாத இந்திர ஜால மகேந்திர ஜால மாயாவி யுத்தத் தந்திரங்களைக் கையாண்டும், இப்போது இந்தப் பரிதாப நிலைமைக்கு வந்திருக்கிறார்கள். அவர்களுடைய நாட்டைச் சுற்றி வளைத்துக் கொண்டு இன்று நாலாபுறமும் எதிரி சைன்யங்கள் நிற்கின்றன.

ஜெர்மனியைக் காட்டிலும் ஜப்பானில் செய்த தவறுகளை உணர்ந்து ஒப்புக் கொள்ளும் சக்தி அதிகம் உண்டென்று தெரிகிறது. அதனாலேதான் டோஜோவுக்கு டிக்கெட் கொடுத்து விட்டார்கள். அதனாலேதான் ஜெர்மனியை ஜயிப்பதைக் காட்டிலும் ஜப்பானை ஜயிப்பது கடினம் என்று எல்லாரும் சொல்கிறார்கள்.

* * *

சரி; மற்றவர்களின் விஷயம் இருக்கட்டும். நம்முடைய சமாசாரம் என்ன? இந்தியாவிலே நாம் நம்முடைய தவறுகளை உணரும் சுபாவம் பெற்றிருக்கிறோமா? நம்முடைய தவறுகளை நமக்குள்ளே யாராவது எடுத்துக் காட்டினால் அதற்காக அவர்மீது எரிந்து விழாமல் பொறுமையுடன் கேட்டு ஆராயும் சக்தி நம்மிடம் இருக்கிறதா? நாம் செய்த தவறையே சரியான காரியம் என்று அடம் பிடிக்கும் அசட்டுப் பிடிவாதம் நம்மிடம் இல்லாமல் இருக்கிறதா?

இது விஷயத்தில் நம்முடைய குணம் எத்தகையது என்று பரிசோதிப்பதாயிருக்கிறது நாகபுரி சர்வகலாசாலையில் ராஜாஜி நிகழ்த்தியிருக்கும் பிரசங்கம்.

அந்தப் பிரசங்கத்தில் ராஜாஜி கல்வி முறையைப் பற்றிச் சில அரிய கருத்துக்களை வெளியிட்டுவிட்டு, ஜனாப் ஜின்னா எப்படித் தமது பாகிஸ்தான் கோரிக்கைக்குத் தாமே குழி தோண்டிக் கொண்டார் என்பதையும் குறிப்பிட்டு விட்டு, ஐந்து வருஷத்துக்கு முன்னால் நமது தேசம் விடுதலை பெறுவதற்கு ஒரு அரிய சந்தர்ப்பத்தை இழந்து விட்டதைப் பற்றியும் எடுத்துக் காட்டியிருக்கிறார்.

"செய்த தவறைப் பற்றியே நினைத்து நினைத்துச் சோகப்பட்டுக் கொண்டிருந்தால் என்ன பிரயோசனம்? இதனால் வீண் மனச் சோர்வுதானே உண்டாகும்? மேலே நடக்க வேண்டிய காரியத்தையல்லவா பார்க்க வேண்டும்?'' என்று கேட்கலாம்.

உண்மைதான்; செய்த தவறை உணர்ந்து விட்டோமானால், அப்புறம் அதைப் பற்றிச் சிந்திக்கவே வேண்டியதில்லை. மேலே நடக்க வேண்டிய காரியங்களைப் பார்க்கலாம். அவ்விதமின்றி செய்த தவறையே சரியென்று சாதித்துக்கொண்டும், தவறை எடுத்துக் காட்டியவர்களாலேதான் காரியம் கெட்டுப் போச்சு என்றும் சொல்லிக் கொண்டிருக்கும் வரையில் மேலே செய்ய வேண்டிய காரியம் இன்னதென்பதையே சரியாகத் தீர்மானிக்க முடியாதல்லவா?

"அப்பனே, குறுக்கு வழியிலே போகாதே! அங்கே சேறும் பள்ளமும் இருக்கின்றன! வண்டி குடை சாய்ந்து விடும்!'' என்று எச்சரித்ததைக் கேளாமல் வண்டிக்காரன் ஓட்டிக் கொண்டு போகிறான். வண்டி குடை சாய்ந்து பள்ளத்தில் விழுந்து விடுகிறது. அப்போதும் வண்டிக்காரன் தான் குறுக்கு வழி வந்தது பிசகு என்பதை உணராமல் எச்சரித்தவன்பேரில் கோபித்து, "நீ அபசகுனம் மாதிரி சொன்னாயே! அதனாலேதான் வண்டி குடை சாய்ந்தது!'' என்று பழி கூறினால், அந்த மனிதன் கடைத் தேறுவது எப்படி?

# ஐந்து வருஷம் போச்சு!

ஒரு வருஷத்துக்கு முன்னால் சென்னையில் ஒரு ஸினிமா வந்திருந்தது. அது யுத்தப் பிரசாரப் படவரிசையைச் சேர்ந்தது. ஆகாச விமானத்தின் உற்பத்தி, வளர்ச்சி, இந்த யுத்தத்தில் அது உபயோகப்படும் முறை ஆகியவற்றையெல்லாம் அதில் காட்டியிருந்தார்கள்.

யுத்த ஆரம்பத்தில் பிரிட்டனும், அமெரிக்காவும் ஆகாச விமான உற்பத்தி விஷயத்தில் எவ்வளவு பின்வாங்கியிருந்தன என்பதை மேற்படி படத்தில் நன்றாக எடுத்துக் காட்டியிருந்தது. ஜெர்மனி ஆகாச விமான பலத்தை எப்படி வளர்த்துக் கொண்டிருந்தது என்பதையும் காட்டியிருந்தது. இது காரணமாக யுத்த ஆரம்பத்தில் பிரிட்டன் மேலும் மேலும் பின்வாங்க நேர்ந்ததையும், ஜெர்மனி வெற்றிக்கு மேல் வெற்றியாக அடைந்து வந்ததையும் காட்டினார்கள்.

பாதிப் படம் வரையில் இவ்விதம் பிரிட்டனும் அமெரிக்காவும் செய்துவிட்ட தவறுகளைப் பற்றியே காட்டி வந்தார்கள். பிறகு, அத் தவறுகள் திருத்தப்பட்ட விதத்தையும் காட்டினார்கள். மள மள வென்று அமெரிக்காவில் விமானத் தொழிற்சாலைகள் பெருகியதையும், ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், பதினாயிரம் என்று ஆகாச விமானங்கள் உற்பத்தியானதையும் காட்டினார்கள். அந்த விமானங்கள் போர்க்களங்களுக்குப் புறப்பட்டதையும் காட்டினார்கள். புறப்பட்ட விமானங்கள் எதிரி சைன்யங்கள் மீதும் எதிரி நாடுகள் மீதும் குண்டு மழை பொழிவதையும் காட்டினார்கள்.

அவ்வளவோடு நிறுத்தவில்லை. இன்னும் என்ன நடக்கப் போகிறதென்பதும் அந்தப் படத்தில் காட்டப்பட்டது. உலகத்தையே வளைத்துக் கட்டிக் கொண்டு வந்த ஜெர்மனியின் 'ஸ்வஸ்திக்' சின்னத்தை அமெரிக்க விமானங்கள் எப்படி டங், டங், டங், டங் என்று நாலாபுறமும் இடித்து உள்ளே உள்ளே உள்ளே தள்ளிக் கொண்டு போய், அதை நசுக்கித் தவிடு பொடியாக்கப் போகின்றன என்பதையும் காட்டினார்கள். ஜப்பானுடைய வருங்கால சர்வ நாசத்தையும் அவ்வாறே எடுத்துக் காட்டினார்கள்.

* * *

மேற்படி படத்தைப் பார்த்துவிட்டு ஸினிமா கொட்டகையிலிருந்து வெளியேறியவர்களில் சிலருடைய மனதில் முதல் பகுதி மட்டுந்தான் பதிந்திருந்தது. "பார்த்தாயல்லவா? பிரிட்டிஷ் அமெரிக்க ஊழல் வெட்ட வெளிச்சமாகிவிட்டது! தங்கள் குட்டை அவர்களே உடைத்துக் கொண்டு விட்டார்கள்! நாலு ஓட்டை ஆகாச விமானங்களை வைத்துக்கொண்டு இவர்கள் ஜெர்மனியையும் ஜப்பானையும் ஜயிக்கவாவது!" என்று பேசிக்கொண்டு போனார்கள்.

ஆனால் யோசனையுள்ள மனிதர்களோ முற்றும் மாறான முடிவுடன் சென்றார்கள். "இந்தப் பிரிட்டிஷ் — அமெரிக்க ஜாதி பொல்லாத ஜாதி! இவர்கள் தங்கள் சொந்தத் தவறை ஒப்புக் கொள்வதற்குப் பின்வாங்குவதில்லை. அதையே பிரசாரத்துக்கும் உபயோகப்படுத்தத் தயங்குவதில்லை. தங்களுடைய தவறைத் தெரிந்து கொள்ளக் கூடியவர்கள் அதைத் திருத்திக் கொள்ளவும் முடியும். ஆகையால், இந்த பிரிட்டிஷ் — அமெரிக்க ஜாதிதான் முடிவிலே ஜயிக்கும்!" என்று அவர்கள் முடிவு கட்டினார்கள்.

பிரிட்டிஷ்—அமெரிக்கர்களிடம் தங்களுடைய தவறை உணர்ந்து அதைத் திருத்திக் கொள்ளும் குணம் இருப்பதோடு மட்டுமல்ல. அந்த நாடுகளில் ஜனநாயகத்தின் ஒரு முக்கியமான அம்சம் — அதாவது அபிப்பிராய பேத உரிமை—நிலைபெற்றிருப்பதால், செய்த தவறுகள் எடுத்துக் காட்டப்படுவதற்கும், அவற்றைக் குறித்துச் சிந்தித்து விவாதிப்பதற்கும் இடமிருக்கிறது. அதிகாரத்திலுள்ளவர்கள் செய்யும் தவறுகளைக் கண்டிப்பதற்காகவே ஆயிரமாயிரம் பத்திரிகைகள் காத்திருக்கின்றன. யுத்த காலத்தில் இராணுவ தளபதிகள் செய்யும் தவறுகளைக் கூட எடுத்துக் காட்டிக் கண்டிக்க அந்த நாடுகளில் எல்லாருக்கும் உரிமை உண்டு. இத்தகைய ஜனநாயகமும் அபிப்பிராய உரிமையுந்தான் அமெரிக்காவும் பிரிட்டனும், இந்த யுத்தத்தில் இதற்குள்ளே அடியோடு தீர்ந்து போகாமல் தலைதூக்கி நிற்பதற்குக் காரணமாயின. அதனால்தான் எதிரிகளின் மூர்க்கத் தாக்குதல்கள், இரகசிய பயங்கர ஆயுதங்கள் எல்லாவற்றையும் ஒழித்து நின்று சமாளிப்பது சாத்தியமாயிற்று. ஏறக்குறைய சர்வநாசத்தின் முனை வரையில் வந்து விட்டவர்கள் அதில் விழாமல் தப்பி மேலும் மேலும் முன்னேறி, இப்போது "அடுத்த


"நானே ராஜா!
நானே மந்திரி!"
வைஸராய் வேவல்
இந்திய சட்ட சபைகூடி சர்க்காருக்கு ஒரு இடைஞ்சலும் இல்லாமல் கலைந்தது.
இந்திய சட்ட சபை


"என் மணிபர்ஸைப் பாருங்கள்! பிறர் பணம் ஒரு தம்பிடி கூட என்னிடம் கிடையாது."
பிரிட்டிஷ் கஜானா
சுரண்டல் கொள்கையினால் கிடைத்த லாபம்
"பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து எந்த இடத்திலிருந்தும், ஒரு தம்பிடி கூட பிரிட்டிஷ் கஜானாவுக்கு வருவது கிடையாது" என்று லார்ட் ஹாலிபாக்ஸ் சமீபத்தில் அமெரிக்காவில் கூறினார்.

# நிகழ்ச்சிச் சித்திரம்

உம்மன்



அமெரிக்காவுக்குப் பறந்து சென்ற ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட் அமெரிக்கத்தலைவர் ரூஸ்வெல்டுக்குக் காந்திஜி கொடுத்துள்ள சேதியையும் எடுத்துப் போவதாகவொரு வதந்தி பரவியிருக்கிறது.

## சக்கரவர்த்தி யார்?

அபிஸீனியாவை விட்டு பிரிட்டிஷாரை வெளியேற்றும்படி அபிஸீனியச் சக்கரவர்த்தி அமெரிக்காவிடம் முறையிடுகிறார்.

நான்கு சுதந்திரங்கள்
அட்லாண்டிக் சாஸனம்






# கல்கி

மலர் 4 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 18


# என்ன சேதி?

## நாகபுரியில் ராஜாஜி

நாகபுரி சர்வகலாசாலைப் பட்டமளிப்பு விழாவில் பிரசங்கம் செய்வதற்காக அழைக்கப்பட்டு ராஜாஜி சென்ற வாரம் நாகபுரி சென்றார். சென்ற இடத்தில், அந்தத் தீர்க்க தரிசனம் வாய்ந்த தலைவரை இன்னும் பல சபைகளிலும் சங்கங்களிலும் வரவேற்று உபசரித்துப் பேசவும் சொன்னார்கள். ஒரு கூட்டத்தின் ஆரம்பத்தில் அவர் மீது முட்டைகளும் தாரும் எறியப்பட்டதாகவும், இந்தக் காலித்தனத்தினால் கூட்டத்தைக் கலைக்க முடியவில்லையென்றும், கூட்டம் அமைதியாக நடைபெற்றதென்றும் செய்தி கிடைத்திருக்கிறது. அறிவாளிகளின் பேரில் மூடர்களுக்கும், உண்மையைச் சொல்கிறவர்களின் பேரில் பொய்யர்களுக்கும் கோபம் வருவது இது முதல் தடவையல்ல. ஆனால் ராஜாஜியைத் தாக்குவதற்குக் கையாளப்பட்ட ஆயுதங்கள் அவரை எதிர்ப்பவர்களை நன்றாய் இனங் காட்டுகின்றன என்பதை மட்டும் குறிப்பிட விரும்புகிறோம். அவர்களுடைய மூளையின் பிரமாணத்துக்குக் கோழி முட்டை நல்ல உதாரணம். அந்தச் சின்ன மூளையை எவ்வளவு கன்னங்கரிய அறியாமை இருள் சூழ்ந்திருக்கிறதென்பதைத் தார் எடுத்துக் காட்டுகிறது. இத்தகைய புத்திசாலிகள் ராஜாஜியின் அறிவுரைகளைக் கேட்க மனங்கொள்ளாததில் ஆச்சரியமென்ன?

## "சக்தி நாடக சபை"

மேற்படி பெயருடன் தமிழ் நாட்டில் புதியதொரு நாடக சபை தோன்றியிருப்பது அறிந்து மகிழ்கிறோம். ஏற்கனவே நவாப் ராஜமாணிக்கம் அவர்களின் கம்பெனியில் இருந்து அநுபவம் பெற்றவரும் சிறந்த அறிவாற்றலும் ரஸிகத் தன்மையும் உள்ளவருமான ஸ்ரீ டி. கே. கிருஷ்ணசாமி மேற்படி நாடக சபையை ஆரம்பித்திருக்கிறார். "தினசரி" ஆசிரியர் ஸ்ரீ டி. எஸ். சொக்கலிங்கம் தலைமை தாங்கி ஆசி கூறி ஆரம்பித்து வைத்த "சக்தி நாடக சபை" நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து தமிழ் நாடகக் கலையை உயர்த்தும் பணியைத் திறமையாக நடத்துமென்று எதிர்பார்க்கிறோம்.

## அப்துல் சத்தார் கடிதம்

திண்டுக்கல் ஜனாப் எம். எஸ். அப்துல் சத்தார் அவர்கள் 1921-ம் ஆண்டிலிருந்து காங்கிரஸில் இடைவிடாமல் தொண்டாற்றி வந்திருக்கும் தேச பக்தர்; சிறைவாசமும் செய்தவர். மதுரை — ராமநாதபுரம் ஜில்லா காங்கிரஸ் ஊழியர்களின் கூட்டத்துக்கு அவர் போயிருந்தது பற்றிப் பத்திரிகைகளுக்கு அவர் எழுதிய அறிக்கை "தினசரி"யில் பிரசுரமாயிருக்கிறது. ஆகஸ்டு தீர்மானத்தை எதிர்த்தவர் என்ற காரணத்தினால் நிர்மாண திட்டத்தை நிறைவேற்றுவதற்காக அமைக்கப்பட்ட காங்கிரஸ் சங்கத்தில் ஜனாப் சத்தாருக்கு இடமில்லாமல் போய் விட்டதாம்! நிர்மாண திட்டத்தில் முக்கியமான அம்சம் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையும் ஹரிஜன விடுதலையும். மேற்படி புதிய கமிட்டிகளில் ஒரு முஸ்லிமாவது ஹரிஜனராவது இல்லையென்றும் ஜனாப் சத்தார் எடுத்துக் காட்டுகிறார். காங்கிரஸ் மகா சபையின் இடைவிடாத பக்தர்களாயிருந்து லீக் முஸ்லிம்களின் தீராக் கோபத்துக்கு ஆளான ஒரு சில முஸ்லிம் நண்பர்களையும் விலக்கி விட்டு, புதிய காங்கிரஸ் சங்கங்கள் என்ன நிர்மாணத் திட்டத்தைத்தான் நிறைவேற்றப் போகின்றனவோ தெரியவில்லை.



குடந்தை A. நல்லா பிள்ளை & ஸன்ஸ் போடோஸ்டுடியோ புரொப்ரைடர் ஸ்ரீ M. D. மூர்த்தி அவர்களுக்கும் வேலூர் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஸ்ரீ மருதநாயகம் பிள்ளை அவர்கள் புதல்வி சௌ. நீலா என்ற புஷ்பாவதிக்கும் 6-11-44ல் வேலூரில் திருமணம் நடைபெற்றது.



# கல்கி
## பொருளடக்கம்



மலர் 4
இதழ் 18

1944 டிசம்பர் 3

தாரண ௵
கார்த்திகை 18



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.



சின்னஞ் சிறு கிளியே — கண்ணம்மா!
செல்வக் களஞ்சியமே
என்னைக் கலிதீர்த்தே — உலகில்
ஏற்றம் புரிய வந்தாய்!

—பாரதியார்











வினோலியா அதிக சுகத்தைக் கொடுக்கக் கூடிய சோப். அதை உபயோகிப்பதனால் ஒவ்வொரு ஸ்நானமும் குளிர்ச்சியையும், உத்ஸாகத்தையும் உண்டு பண்ணுகிறது. இந்த சோப்பின் வாசனை களைப்படைந்த நரம்புகளுக்கு சோர்வை போக்கி சுகத்தைக் கொடுக்கிறது.







வினோலியா
ஒயிட் ரோஸ் ஸோப்பு

VINOLIA CO. LIMITED, LONDON, ENGLAND